உ

# ஆனந்தபோதினி

## ஒரு சிறந்த மாதாந்தத் தமிழ்ச் சஞ்சிகை.



"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.

**(தொகுதி 12.)**

அக்ஷயஹு ஆடிமீ முதல் பிரபவஹு
ஆனிமீ வரையில்

1926ஹு ஜூலைமீ முதல் 1927ஹு ஜூன்மீ வரையில்



**நா. முனிசாமி முதலியார்,**

"ஆனந்தபோதினி" ஆபீஸ்,

நெ. 6, வெங்கடேச மேஸ்திரி தெரு,

சௌகார்பேட்டை, மதராஸ்.



காலிகோ பைண்ட் விலை ரூபா 1—6—0. | 1927 | தபாற் கூலி வேறு.

# ANANDA BODHINI

## GOLDEN OPINIONS

---

From Rao Saheb Late T. Ramakrishna Pillai Avl., B.A., F.M.U., F.R.H.S., Chairman, Board of Examiners in Dravidian Languages, Madras University.

I am a regular reader of ' Ananda Bodhini " the Tamil monthly published in George Town and I am glad to take this opportunity of expressing my appreciation of the way the Journal is conducted. It is just the kind of magazine we want for the Indian women in their houses and the conductors of the Journal have my best wishes for the success of their undertaking.

*Madras, 28th Nov. 1915,*
THOTTAKADU HOUSE } (Sd.) T. RAMAKRISHNA PILLAY.

---

From Rao Bahadur A. C. Pranatartihara Iyer Esq., B.A., I.S.O., Retired Inspector of Schools, *now* Registrar of Books, Nungambakkam.

I have read several numbers of "**Ananda Bodhini**" It is conducted on right lines The matter is suitable and the diction is unobjectionable I can unhesitatingly say that the journal deserves public encouragement and support.

NUNGAMBAKKAM,
*Madras, 5th Dec. 1915.* } (Sd.) A. C. PRANATARTIHARA IYER.

---

We have received the current number of the Tamil monthly "**Ananda Bodhini,**" containing a variety of information on several subjects of every day importance. The special feature of the monthly is that a separate section is set apart for giving advice to women either in the form of abstract statements, or small stories containing moral lessons.—*Hindu 22-9-15.*

---

Dear Sir.

Your Tamil monthly entitled " **ANANDA BODHINI** "..........................is written in *easy, clear* and *readable* style, *well-suited, particularly,* to *ladies* who take a liking to it on account of the varied subjects of interest dealt therein, calculated to mould their characters. That such a monthly should be in existence, side by side with the Anglo-Indian contemporaries, is very much to be appreciated. The subjects dealt within the short compass of the monthly are such that they deserve to be *read* and *re-read* from the view point to quality in contradistinction from style and rhetoric, with a select few of our readers seem to yearn for, as is evident from the pages of the current number *i.e.* pages 288 and 289. A majority of the subscribers now on the rolls will be at one with me when I say that the style now adopted would conduce to the well-being and uninterrupted continuances of the monthly, since it is being and has to be read by both sexes. ... ... ... ... ... It is very much to be envied that there should be over 10000* subscribers, on the rolls which no other monthly of the kind is able to secure, or has ever before secured since inception. I wish the monthly all success.

Trivandrum, 21-1-17. } A. V. SUBRAMANIA AIYAR, F.N. S.A. (Lon.), F.C.I. (Birm.)

---

* Now more than 20 Thousands.

# ஆனந்த போதினி

## 12-வது வருட அட்டவணை.

உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.




| தொகுதி | அக்ஷயஸ்ரீ ஆடிமீ கஉ | பகுதி |
| --- | --- | --- |
| 12 | 1926ஸ்ரீ ஜூலைமீ 16உ | 1 |


## கடவுள் வணக்கம்.

இங்கற்ற படியங்கும் எனவறியும் நல்லறிஞர்
எக்கால மும் உதவுவார்
இன்சொல்தவ ரூர்பொய்ம்மை யாமிழுக் குரையார்
இரங்குவார் கொலைகள் பயிலார்
சங்கற்ப சித்தாவர் உள்ளக் கருத்திலுறை
சாக்ஷிநீ இகபரத்தும்
சந்தான கற்பகத் தேவா யிருந்தே
சமஸ்தஇன் பமும் உதவுவாய்
சிங்கத்தை யொத்தெனைப் பாயவருவினையினைச்
சேதிக்க வருசிம் புளே
சிந்தா குலத்திமிரம் அகலவரு பானுவே
தீனனேன் கரையேற வே
கங்கற்ற பேராசை வெள்ளத்தின் வளருட்
ககனவட் டக்கப்ப லே
கருதரிய சிற்சபையில் ஆனந்த நிர்த்தமிடு
கருணா கரக்கடவுளே. (1)

வஞ்சனை யழுக்கா றுதி வைத்திடும் பாண்ட மான
நெஞ்சனை வலிதின் மேன்மேல் நெக்குநெக் குருகப் பண்ணி
அஞ்சலி செய்யுங் கையும் அருவிநீர் விழியு மாகத்
தஞ்சமென் றிரங்கிக் காக்கத் தற்பரா பாமு னக்கே. (2)

உனக்குநான் அடித்தொண் டாகி உன்னடிக் கன்பு செய்ய
எனக்குநீ தோற்றி யஞ்சேல் என்னுநாள் எந்த நாளோ
மனக்கிலே சங்கள் தீர்ந்த மாதவர்க் கிரண்டற் றோங்கும்
தனக்குநே ரில்லா ஒன்றே சச்சிதா னந்த வாழ்வே. (3)

## அரும்பொருள் விளக்கம்.

1. ஹிதோபதேசங்களைச் செய்யவல்ல பேரறிவாளரை, இம்மை, அம்மை, மறுமை என்னும் மூவிதப் பயனையுந் தரும் வினைகள் பற்றித் தொடருவ தில்லை. ஆகவே அவர்கள் இம்மையில் முடிந்தவண்ணமே மறுமையிலாகு மென்னும் கொள்கையினை யுடையவராவர் என்பார், 'இங்கற்றபடி யங்கும் எனவறியும் நல்லறிஞர்' என்றார்.

"மும்மை தருவினைகள் மூளாவாம் மூதறிவார்க்
கம்மையும் இம்மையே யாம்"

எனத் திருவருட்பயன் கூறுதல் காண்க.

இத்தன்மையினர், எப்போதும் பிறருக்கு உதவிபுரிதலையும், இன்சொல் வழங்குவதில் வழுவாமையையும், பொய்பேசாமையையும், ஜீவர்கள்மேல் இரக் கங்கொள்ளுதலையும், கொலைசெய்யாமையையும் தமக்கு விரதமாகக் கொண் டொழுகுவர். இவர்களே சங்கற்பசித்த ரெனப்படுவர். இவர்களுடைய இருத யத்தில் இறைவன் சாக்ஷி பூதனாக எழுந்தருளியிருப்பன்; இப்படி இறைவன் சந் தான விருக்ஷம்போலவும், கற்பக விருக்ஷம்போலவும் இம்மகான்களது திருவுள் ளத்தில் தெய்வத்தன்மையோடிருந்து இவர்களுக்கு எல்லாச் சுகங்களையுங் கொடுத்தருளுவன். அவ்விறைவனை நோக்கி, ஆசிரியர் 'சிங்கத்தை யொத்து என்னை வருத்த வருகின்ற வினைகளைச் சேதிக்க வரும் சரபமே! மனக் கிலேசங்களாகிற இருளை விலக்கவரும் சூரியனே! அடியேன் பிறவிக்கடலைக் கடந்து முத்தியாகிற கரையில் ஏறும்படி எனது பேரன்பென்னும் பிரவாகத் தில் சஞ்சரிக்கிற கிருபாமயமான ஆகாயவட்டத்தில் உலாவும் மரக்கலமே!' என்று இப்பாடலில் வாய்விட்டுத் துதிக்கின்றார்.

இவ்வுத்தமர்களைப்பற்றி,

"அன்பொப் புரவு கண்ணோட்டம்
அழியா வாய்மை நாணுதி
இன்பம் பெருக்கு நற்குணங்கள்
எல்லாம் நிறைந்த சான்றோர்கள்
துன்புற் றவர்க்கும் இனியனவே
சூழ்வர் துணையின் வினைமுடிப்பர்
வன்பிற் றளரார் நட்டார்க்கு
மடங்கித் தோற்றல் நாணுரே"

என்று விநாயக புராணங் கூறுவது இங்குணர்தற்பாலதாம்.

ஈதல் அறிவுடையார்க்கியற்கையாதலின் அவரை 'எக்காலமும் உதவுவார்' என்றும், அறத்தின் சொரூபத்தை யுள்ளபடி யுணர்ந்த அவர்களுடைய வாய்ச் சொற்கள் என்றும் இன் சொல்லாதல்பற்றி 'இன்சொற்றவரூர்' என்றும், பிறி தோருயிர்க்குத் தீங்கு சிறிதும் உண்டாக்காத சொற்களையே அவருடையாக

லின் 'பொய்யாமையா மிழுக்குரையார்' என்றும், அருளையே தாரமாகக் கொண்டு வாழ்பவராகலின் 'இரங்குவார்' என்றும், பிறப்பின் நிலையை யஞ்சிப் பிறவாமைப்பொருட்டுத் துறவுபூண்ட எல்லாருள்ளும் கொலைப்பாவத்தை யஞ்சிக் கொல்லாமையாகிற அறத்தை மறவாது உயர்ந்தவரே தலையாயருள் ஒருவராகலின் 'கொலைகள் பயிலார்' என்றும் கூறினர்.

அற்றபடி—முடிந்தவண்ணம். இழுக்கு—குற்றம்.

சங்கற்பசித்தர்—ஆகாமியம் ஏறுதற் கிடங்கொடாமல் பிராரத்துவமாத்திரம் அனுபவித்து வருஞ் சித்தாந்தச் செல்வர்கள்; இத்தகையார் எக்காலமும் அதோமுகமாகத் தரிசனஞ்செய்ய அவர்களுள்ளத்தில் நாளும் இறைவன் விளங்குவானாதலின் 'அவருள்ளக் கருத்திலுறை சாக்ஷி நீ' என்றனர்.

சந்தானம், கற்பகம்-இவைதேவலோகத்திலுள்ள பஞ்ச தருக்களில் இரண்டு.

சேதித்தல்—அழித்தல்.

சிம்புள்—எட்டுக் கால்களையுடைய ஒரு பட்சி; சிங்கத்தை மிகவும் எளிதாகக் கவர்ந்து சென்று தன் குஞ்சுகளுக்கு உண்பிப்பது.

சிந்தா ஆகுலம்—மனக்கிலேசம்.

திமிரம்—இருள்.

பானு—சூரியன்.

தீனன்—எளியேன்.

கங்கு—எல்லை.

ககனம்—ஆகாயம்.

2. அழுக்காறு ஆதி—அசூயை முதலியன; (முதலியன என்றதனால் காமம் குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம் என்பவற்றையுங் கொள்க.)

பாண்டம்—பாத்திரம்.

துர்க்குணங்கள் நிறைந்த ஒருவனுக்கு மனம்நெக்குருகுதல், கை அஞ்சலியாதல் (அஞ்சலித்தல்—குவிதல்), கண்ணீர் வார்தல் உண்டாகாவாதலின் இவையனைத்தும் உண்டாகத் தேவரீரே வலியவந்து ஆட்கொண்டு இவையுண்டாம்படி செய்யவேண்டும் என்கிறார். தற்போதமொழிந்தார்க்கு இவை இயற்கையாகவே விளையும் நற்செயல்களாம்.

3. அடித்தொண்டு—அடிமை.

தோற்றி—வெளிவந்து.

அஞ்சேல்—பயப்படாதே.

மனக்கிலேசம்—மனோவியாகுலங்கள்.

அன்பு செய்வாரிடத்திலேயே இறைவன் தோன்றி விளங்குவனாகலின் 'அன்புசெய்ய எனக்கு நீ தோற்றி' என்றார். மனக்கிலேசம் உள்ளவரைக்கும் தன்னிடத்திலேயே திரோதானத்தால் மறைந்திருந்த இறைவன், மனக்கிலேசம் அற்றவுடனே அனன்னியமாகத் தோன்றி விளங்குவன் என்பார் 'மனக் கிலேசங்க டீர்ந்த மாதவர்க் கிரண்டற்றோங்கும்' என்றனர்.

# ஆனந்தபோதினி

அக்ஷய ௵ ஆடி ௴ ௧௨

## நமது போதினியின் 12-வது ஆண்டு.

அருட்பெருஞ் சோதியாகிய இறைவனது திருவருளால் நம் போதினிக்கு இந்த ஆடி ௴ 1௳ 12-வது வருடம் ஆரம்பமாகின்றது. சென்ற 11-வருடங்களாக, கல்வி விருத்திக்கும், தேச க்ஷேமத்திற்கும், நம் நாட்டினரின் தேகாரோக்கியத்திற்கும், ஆன்மலாபத்திற்கும், ஆடவர் உயர்ச்சிக்கும், பெண்மக்கள் நலத்திற்கும், பொதுநலத்திற்கும் உரிய பற்பல மார்க்கங்களை விளக்கிக்காட்டும் விஷயத்தில் உழைப்பெடுத்து வந்ததுபோலவே நம் போதினி இனிமேலும் ஊக்கத்துடன் உழைத்துவருமென்பதை ஒருவர் எடுத்துச் சொல்லாமலே எல்லோரு முணர்வர். இஃதித்தகைய பொதுநல நோக்கத்துடன் விளங்குவதாலும், இலாபத்தை எதிர்பாராமல் குறைந்த சந்தாவுடையதாயிருப்பதனாலும் தமிழ்நாட்டினர் எல்லோருக்குமே இதனிடத்து அதிகரித்த அன்புண்டு. அதனாலேயே, இது தொடங்கிய நாள் முதற்கொண்டு இதற்கு மாதந்தோறும், வருடந்தோறும் சந்தாதாரர்கள் அதிகரித்துக்கொண்டேவருகின்றார்கள்; "தமிழ்நாட்டில் ஆனந்தபோதினியொன்றே இருபதினாயிரத்துக்கு மேலான சந்தாதாரர்களையுடையது" என்று பலரும் கொண்டாடுமாறு நண்பர்கள் பலரும் தாங்கள் சந்தாதாரராகச் சேர்வதோடு மேலும் பலரைச் சேர்த்தும் இதனை நாடோறும் விருத்திசெய்துகொண்டே வருகின்றார்கள். ஜீவிய சந்தாதாரராகவும் பலர் சேர்ந்து வருகின்றார்கள். சிறந்த கல்விமான்களும், புத்திமான்களும், ஸ்ரீமான்களும் இதற்குப் பற்பல கட்டுரைகளெழுதியும் உபகரித்து வருகின்றனர். இவர்கள் போதினிமீதுள்ள அபிமானத்தால் மாதந்தோறும் வியாசங்கள் எழுதிவருவதால் அவற்றுள் பத்திரிகையில் இடமுள்ளவரை பிரசுரிக்கப்படுவன தவிர மீதியாக நின்றுவிடுபவை ஆயிரக்கணக்காகச் சேர்

ந்துவருகின்றன. இப்படிப் பெரும்பான்மையான வியாசங்கள் வெளி வராமல் எஞ்சி நின்றுவந்தாலும் அபிமானமுடைய அன்பர்கள் வியாசமெழுதுவதை நிறுத்துவதில்லை.

சிற்சிலர்மட்டும் சிற்சில அபிப்பிராயபேதங்களைக் கொண்டு, ஆனந்தபோதினி தங்கள் நோக்கம்போல் இல்லையென்றும், தங்கள் வியாசங்களை வெளிப்படுத்தவில்லையென்றும் சில குறைகளைக் கூறி ஒவ்வொரு வருடக் கடைசியிலும் பத்திரிகை வி-பி-யில் அனுப்பப் படும்போது அதனைத் திருப்பிவிட்டுச் சந்தாதாரர்களினின்றும் விலகிக்கொள்கிறார்கள். ஒரு பெருங் கூட்டத்தாரில் இப்படிச் சிலர் இருப்பது உலக இயற்கையே. இதனால், பெருங்கூட்டத்தாரால் அபிமானிக்கப்பெறும் ஒரு பெருங் காரியத்திற்குக் குறையொன்றும் நேர்ந்துவிடமாட்டாது. இஃதெல்லா இடங்களிலும் நேர்வதுண்டு. இப்படி வருடக் கடைசியில் சிலர் சந்தாதாரர்களினின்று நீங்கிவிடினும், அடுத்த வருட ஆரம்பத்தில், அவர்களின் தொகைக்கு எத்தனையோ மடங்கு அதிகமாகப் புதிய சந்தாதாரர்கள் சேர்ந்துவிடுகிறார்கள். அதனால், விலகிக்கொண்டவர்களைப்பற்றிக் குறைவு நேர்ந்துவிட்டதாகத் தோற்றுவதேயில்லை. பொதுவாக நோக்கும் போது நம் தமிழ்நாடு முழுவதிலும், தமிழர் இருக்கும் மற்றைய நாடுகளிலும் ஆனந்தபோதினியின் விஷயத்தில் அபிமானம் மிகுந்து பரவி வருகின்றதென்பது ஐயமற விளங்குகின்றது.

இங்ஙனம் நண்பர்கள் அனைவரும் போதினிமீது விசேஷ அன்பு செலுத்திவருவதால், நாமும் அவர்களுடைய நோக்கங்களை அனுசரித்துப் பத்திரிகையை நடத்தி மேன்மேலும் விருத்திசெய்துகொண்டு வருகிறோம். முன் 40 பக்கங்களில் வெளிவந்த நம் சஞ்சிகை இவ் வருட ஆரம்பத்திலிருந்து 48 பக்கங்களுடையதாயும், உயர்ந்த விஷயங்கள் நிறைந்ததாயும், சிறந்த அமைப்புள்ளதாயும் வெளிவரும். இன்னும் சந்தாதாரர்கள் அதிகரிப்பார்களாயின், நம் பத்திரிகை முகப்புப் படங்களுடனும், மேலும் மேலும் உயர்ந்த தோற்றத்துடனும் வெளிவருதல்கூடும்.

ஆதலின், தமிழ்நாட்டிலுள்ள சகோதரர்களும், சகோதரிகளும் இதற்குமுன் நம் போதினியை ஆதரித்து வந்ததுபோலவே இனி மேலும் ஆதரித்து இது மேன்மேலும் விருத்தியடையும்படி இன்னும் பல சந்தாதாரரைச் சேர்த்து உதவிபுரியுமாறு நாம் எல்லோரையும் கேட்டுக்கொள்கிறோம். இதுவரையிலும் நம் பத்திரிகைக்குச்

சந்தாதாரராகச் சேர்ந்தும், விஷயதானம் புரிந்தும் உதவிசெய்து வந்த சகோதரர்களுக்கும், சகோதரிகளுக்கும் நாம் என்றென்றும் நன்றிசெலுத்தக் கடமை பூண்டிருக்கின்றோம். எங்கும் நிறைந்த இறைவன் எல்லோருக்கும் நல்லருள்புரிவாராக.

ஓம் தத் ஸத்.

---

## நன்மைக்கும் தீமைக்கும் நாமே காரணம்.

உலகத்தில் மக்களாய்ப் பிறந்த நாம், மிகுதியும் விரும்புவது நன்மையே. அப்படியிருந்தும் நமக்கு நன்மையும் தீமையும் கலந்தே வருகின்றன. இப்படி வருதற்குக் காரணம் நாமே. இங்குள்ள பற்பல மார்க்கங்களையும் ஆராய்ந்து நன்மார்க்கத்தைக் கடைப்பிடித்தொழுகுவோர் நன்மையையே அடைகின்றனர்; தீயமார்க்கத்தைப் பின்பற்றி நடப்போர் தீமையையே அடைகின்றனர். நன்மார்க்கம், கெட்டமார்க்கம் ஆகிய இரண்டையும் பின்பற்றுவோர் நன்மை தீமை என்னும் இரண்டையு மடைகின்றனர்.

புண்ணிய பூமியாகிய நம் நாட்டில் நாம் கஷ்டமின்றி மகிழ்ச்சியுடன் ஜீவிப்பதற்கு எத்தனையோ மார்க்கங்களிருக்கின்றன. அவற்றுள், விவசாயம், வியாபாரம், கைத்தொழில் முதலியன மனிதர்க்குச் செல்வத்தையும், சிறப்பையும், சௌக்கியத்தையும் உண்டாக்கக்கூடியன. இவற்றினுட் பிரிவாகக் கிளைக்கும் எத்தனையோ ஆயிரக் கணக்கான தொழில்கள் இருக்கின்றன; அவையெல்லாம் மனிதர்க்கு மகிழ்ச்சி மிக்க வாழ்வை விருத்தி செய்யக்கூடியனவே; இதைப்போல் இன்னும் எத்தனையோ உலகங்களையும் காப்பாற்றக் கூடியவையே.

விவசாயத்தில், உணவுப்பொருள்களாகிய நெல், கேழ்வரகு, சோளம், கம்பு, தினை, சாமை, துவரை, உழுந்து, கடலை, மொச்சை முதலிய தானிய வகைகளும், கரும்பு, காய்கறிகள், கனிகள், கிழங்குகள், அறுசுவைப் பொருள்கள் முதலியவைகளும், ஆடைக்குபயோகமாம் பருத்தி, பட்டு, நார் வகைகள் முதலியவைகளும், வியாபாரத்துக்குரிய பற்பல பொருள்களும் உற்பத்தியாகின்றன.

வியாபாரத்தில், உள்நாட்டுச் சாக்குகளை இலாபத்திற்கு வெளிநாட்டிற்கு ஏற்றுமதி செய்வதாலும், வெளிநாட்டுச் சாக்குகளை உள்

நாட்டில் இலாபத்திற்கு இறக்குமதி செய்வதாலும், ஒரு நாட்டுப் பொருளை மற்றொரு நாட்டிற்குக் கொண்டுபோய் இலாபத்திற்கு விற்பதாலும், உள்நாட்டிலோ உள்ளூரிலோ உள்ள பொருள்களைச் சில்லறையாக வாங்கி இலாபத்திற்கு விற்பதாலும், இன்னும் பற்பல விதங்களாலும் அவரவர் செய்யும் வியாபார அளவிற்குத் தக்கபடி ஊதியங் கிடைக்கும்.

கைத்தொழிலில், உள்நாட்டிற்கும், வெளிநாட்டிற்கும் மனிதர்க்கு இன்றியமையாதனவாகிய பற்பல பொருள்களை உற்பத்தி செய்து விற்று மிகுந்த பொருள் தேடலாம்; அவற்றுள் சொந்தத்துக்கு வேண்டியவற்றையும் உபயோகித்துக்கொள்ளலாம்.

இவற்றுள், விவசாயம், ஒரு வித்து எத்தனையோ நூற்றுக் கணக்கான தானியங்களைத் தரக்கூடிய விசேஷ இலாபகரமான தொழில். வியாபாரம் முதல்வைத்த பொருளுக்குமேல் எத்தனையோ மடங்கு அதிகமான திரவியலாபத்தைத் தரக்கூடியது; கைத்தொழிலும் அத்தகையதே. இவற்றைச் செய்யத்தக்க முறைப்படி புத்தியுடன் ஜாக்கிரதையாகச் செய்துவந்தால் நிச்சயமாக இவற்றால் அதிகரித்த செல்வத்தை அடையலாம்; உலக அனுபவத்திலும் குறைவின்றிச் சௌக்கியத்தை அடையலாம்; உயர்ந்த தான தருமங்களைச் செய்து மறுமை யின்பத்தையும் பெறலாம். இத்தொழில்களில் ஒன்றைக் கிரமப்படி செய்து குடும்ப வாழ்க்கையையும் ஒருவன் ஒழுங்கான முறையில் நடத்தி வருவானாயின் அவன், இம்மை, மறுமை ஆகிய இரண்டிடங்களினும் மேன்மையையே அடைவான்.

உத்தியோகம் ஒருவகையில் மனிதர் ஜீவிப்பதற்கேதுவாயிருப்பினும், பொருள் விருத்திசெய்வதற் கேதுவில்லாததாகும். இதில் எவ்வளவு ஊதியங் கிடைப்பினும் இதன் அந்தஸ்திற்குத் தக்கபடி இடம்பமான உடை, வாகனம், உணவு, வாசஸ்தானம் முதலியவற்றிற் செலவாகிவிடும்; பணம் மீதியாவது அருமை. அதிகரித்த சம்பளமுடைய சிலரே கொஞ்சம் ஐசுவரியம் சேர்த்துவைக்க முடியும்.

இவற்றுள், மேற்கூறிய விவசாயம், வாணிகம், கைத்தொழில் ஆகியவற்றையும், அவற்றினுட் பிரிவான பற்பல தொழில்களையும் கைக்கொள்வோர் செல்வத்திலும் சௌக்கியத்திலும் சிறந்து விளங்குவார்கள்; அவற்றைப் புறக்கணிப்போர் கஷ்டநஷ்டங்களுக்குள்ளாவர். மேல்நாடுகளெல்லாம் மேற்கூறிய தொழில்களில் பயனுடைய தொழில்களையே அறிந்து செய்து செல்வத்திற் சிறந்து மேலோங்கி

'மேல்நாடுகள்' என்னும தங்கள் பெயர்க் காரணத்தை மெய்ப்பித்து நிற்கின்றன. நம்முடைய நாடோ, பெரும் பயன்தரும் அத்தகைய தொழில்களையெல்லாம் கைநழுவவிட்டுப் பயனற்றவைகளைக் கைக்கொண்டு தாரித்திரமுற்றுக் கீழ்மையடைந்து, 'கீழ்நாடு' என்னும் தன் பெயர்க்காரணத்தை விளக்கி வருகின்றது. அதனால் நம் நாட்டினர் பிற்போக்குடையவர்களாய்ப் பற்பல தீமைகட்குள்ளாகி வருகின்றனர். இதற்கு, சிறந்த கொள்கைகளை அனுசரிக்காத நம்மவர்களே காரணமின்றி வேறொரு காரணமு மில்லை.

நம்மவர், திருப்தியான வாழ்க்கையை அடைதற்குரிய விவசாயம் முதலிய எத்தனையோ மார்க்கங்களிருந்தும் அவற்றைக் கவனிப்பதில்லை; வறுமையும் துயரமும் வளர்ந்தோங்கும் இடம்பமிக்க காரியங்களையே செய்து இடர்ப்படுகின்றனர்: எல்லோருமே—கிராமாந்தாங்களிலுள்ளவர்களும்—நகரங்களில் நெருங்கி, அதிகப் பணத்தைச் செலவிட்டு ஆங்கிலங்கற்று உயர்தர பரீக்ஷைகளில் தேறி, உத்தியோக பதவிகளில் ஏறி, நாகரிக வாழ்க்கை வாழுதற்கே இரவும் பகலும் இடைவிடாது முயலுகின்றனர். இதனாலுண்டாகும் தொல்லைகள் பல: வருஷந்தோறும் ஆங்கில பரீக்ஷையில் தேறிவருபவர்கள் ஆயிரத்துக்கு மேற்பட்டவர்களா யிருக்கின்றனர். முன்னரே உத்தியோக ஸ்தானங்கள் ஒவ்வொன்றிலும் ஒவ்வொருவர் அமர்ந்துகொண்டிருக்கிறார்கள். அப்படியிருக்கப் புதியவராக வருகிறவர்களுக்கு எங்கே இடம் கிடைக்கும் ? முன்னிருந்தவர்கள் மேலுலக யாத்திரை செய்யவேண்டும்; அல்லது பென்ஷன் வாங்கிக்கொள்ளவேண்டும். அப்படியானால் மாத்திரமே சிலருக்கு இடங் கிடைக்கும். அவ்வாறே எங்கோ சிற்சில ஸ்தானங்கள் காலியாகின்றன; அப்படி யாவது தெரிந்தவுடன் ஒவ்வொன்றிற்கும் புதிதாகப் படித்து வெளியேறியவர்களில் நூற்றுக்கணக்கானவர்கள் அப்ளிகேஷன் அனுப்புகிறார்கள். அவர்களில் ஒவ்வொருவர்க்கு ஒவ்வொன்று கிடைக்கின்றது. மற்றவர்கள் உத்தியோகந் தேடி அலைந்து திரிந்து பத்தோ பதினைந்தோ சம்பளம் கிடைக்கும்படியான ஏதேனுமொரு தாழ்ந்த வேலையில் அமருகிறார்கள்; அந்தச் சம்பளம் அவர்களுடைய ஜீவனத்திற்குப் போதுவதில்லை; அதனால் அவர்கள் வருவதை நம்பி உள்ளதை இழந்து உள்ளம் கலங்குகிறார்கள். இன்னும் சிலர் ஒரு வேலையும் அகப்படாமலும், நாட்டுப்புற வாசஞ் செய்ய இஷ்டமில்லாமலும் சாப்பாட்டுக்குக் கஷ்டப்பட்டுக்கொண்

டாவது எதை எதையோ செய்தும், எங்கெங்கோ அலைந்தும் திரிகிறார்கள்.

உத்தியோகம் பெற்றவர்கள், உயர்ந்த சம்பள முடையவர்களாயினும் விருதாச் செலவுசெய்து வறிஞராகும் வழியில் நடக்கிறார்கள். நாகரிகமென்னும் மயக்கந் தலைக்கேறி அன்னிய நாட்டாசார வலையிலகப்பட்டு மேல்நாட்டாரைப்போல் நடிக்கத்தொடங்கி உடையிலும், ஓய்யார நடையிலும், உணவிலும், உன்னத மாளிகை வாசத்திலும், கேட்டிற்கேதுவான மோட்டார் சவாரியிலும், மயிர் வெட்டிலும், இஞ்சு மீசையிலும், காப்பிக்குடியிலும், பீடி சிகரெட்டிலும், இன்னும் பற்பல இடம்ப காரியங்களிலும், வரவுக்குமிஞ்சிச் செலவு செய்து கடன்பட்டு முடிவில் கஷ்டப்பட்டுக் கலங்குகிறார்கள்.

நாட்டுப்புறங்களில் ஆங்கிலம் பயிலாமல் பயிர்த்தொழில் செய்துகொண்டிருந்தவர்களுள்ளும் பலர், நகரத்தில் நாகரிகவாசஞ் செய்யவிரும்பி நிலங்களைப் பாழடையப் போட்டுவிட்டுவந்து சேவக வேலை கிடைத்தாலும் போதுமென்று சிறுசிறு வேலைகளில் அமர்ந்து இரண்டுங் கெட்டவர்களாய்க் கஷ்டமடைகிறார்கள்.

சிலர், உத்தியோகத்தை விரும்பாமல் வியாபாரம் கைத்தொழில் முதலியவற்றைச் செய்கிறார்கள். எனினும், அவர்கள் அன்னியருக்கடங்கியவர்களாய்ப் புறநாட்டார் இலாபமடையும் விதமாகவும், நம் நாட்டார் நஷ்டத்தை அடையும் விதமாகவும் தங்கள் வணிகத்தைப் பணிவுடன் நடத்துகின்றார்கள்; நம்மவர்களுக்குள்ளேயே ஒருவர் செய்யும் வியாபாரத்தையும், வேறு தொழில்களையும் போட்டி போட்டுப் பலரும் செய்து எல்லோருமே இலாபமின்றிக் கெடுகிறார்கள்.

அன்னியநாட்டுப் பழக்கமாகிய காப்பிக்குடியையும் காரணமின்றி நம்மவர் பெருமைக்காகப் பழகிக்கொண்டார்கள்; அதனால், நகரங்களிலும் நாடுகளிலும் காப்பிக்கடைகள் அடிக்கொன்றாக அளவற்றுப் பெருகிவிட்டன; இவற்றில் நம்மவர்கள் அனாவசியமாகச் செலவிடும் பணங்கள் அளவற்றனவாகும். கட்குடியினால் பல குடும்பங்கள் கெடுவது இயற்கை; எனினும், இப்போது காப்பிக்குடியினாலேயே அதிகப் பொருள்செலவாகி அநேககுடும்பங்கள் கெட்டொழிகின்றன.

பல கெடுதிகளை உண்டுபண்ணக்கூடியனவும், சீக்கிரம் அழிந்து போவனவும், அனாவசியமானவையும், நம் நாட்டுப் பணங்களை

வெளியே ஒதுக்கித் தள்ளுவனவுமாகிய புறநாட்டுப் பொருள்களையே நம்மவர் மிகுதியும் வாங்கி உபயோகிக்க விரும்புகின்றனர். இதனாலுண்டாம் பொருள்நஷ்டம் அளவற்றனவாம்.

நம்மவர் செய்யும் சுபாசுபகாரியங்களில் அவரவர் சக்திக்கேற்பக் கிரமப்படி செலவுசெய்வதை விடுத்து அதிக்கிரமித்துத் தங்கள் சக்திக்கும் மீறி அனாவசியமாகப் பொருளைச் செலவிடுகின்றனர். குடும்பசெலவுக்குப் போதிய வருமானமில்லாதவர்களுங்கூட பெரிய கோடீசுவரரைப்போலச் சகல விஷயங்களிலும் இடம்பச்செலவு செய்ய விரும்புகின்றனர்.

நாடகம், பயாஸ்கோப், சர்க்கஸ் முதலிய வேடிக்கைத் தொழில்களும், பிரயாசைப்பட்டு அவற்றைக் கற்றுக்கொண்டவர்களால் நடத்தப்படுவன குறைந்திருப்பினும், முறைப்படி பயிலாதவர்களால் நடத்தப்படுவன எங்கும் பெருகியிருக்கின்றன. பெரும்பான்மையும் ஒவ்வொரு இடத்திலும் தினந்தோறும் இவை நடைபெறுகின்றன. அவற்றாலும் பொதுஜனங்களுடைய பொருள் ஏராளமாகச் செலவாகிவருகின்றது.

ரெயில்வேகட்டணம் அளவுக்குமிஞ்சி அதிகரித்திருக்கும் இக்காலத்தில் பலர் அனாவசியமான காரியங்களுக்கெல்லாம் அடுத்தடுத்துப் பிரயாணம் செய்து பெரும்பொருளைப் போக்கிவிடுகின்றனர்.

அநேகர் சமாதானத்துடன் நடத்தும் சிறு சிறு காரியங்களிலும் மனம் மாறுபட்டு வம்பு வழக்குகளை விளைவித்து அவ்வழிகளில் அளவற்ற பணத்தை அழிக்கின்றனர்.

இன்னும் இவர்கள் பொருளழிவுக் கேதுவாகச் செய்துவரும் காரியங்கள் எத்தனையோ உண்டு. அவற்றை யெல்லாம் எழுதப்புகின் மிக விரிவெய்தும். பல பெரியோர்கள் அவைகளைப் பற்பல சமயங்களிலும் பத்திரிகைகள் மூலமாகவும், பிரசங்கவாயிலாகவும் வெளியிட்டே வருகின்றனர். அங்ஙனம் வெளியிடினும் அநேகர் அத்தகைய பெரியோர் உரைகளை மதியாமல் மறுத்துவிட்டுத் தங்கள் மனம்போல் நல்லதைக் கெட்டதாகவும், கெட்டதை நல்லதாகவும் கருதி இத்தகைய தீய மார்க்கங்களையே பின்பற்றி யொழுகுகின்றனர். இதனாலேயே கஷ்டம் நீங்குவதற் கேதுவில்லாமலிருக்கின்றது. நாம் சௌக்கியமுறவேண்டுமானால் இத்தீய நடைகளை யொழித்து நன்னடையை அனுசரிக்கவேண்டும்.

இப்பொழுது செல்வாக்குடன் வாழ்ந்துவரும் புறநாட்டினர் எவ்விதம் நடந்து வருகிறார்களென்பதை நாம் கவனிக்கவேண்டும். நாம் அன்னியநாட்டுப் பழக்கவழக்கங்களை விரும்புவதுபோல மேல் நாட்டாருள் ஒருவராவது நம்முடைய ஆசாரங்களை விரும்புகிறார்களா? நம்மைப்போல கேட்டிற்கான மார்க்கங்களிற் செல்கின்றார்களா? இல்லையே. அவர்களைப்போல் நாமும் ஏன் நடந்து சௌக்கிய முறலாகாது?

நாம் பெரும் பணத்தைச் செலவிட்டுக் கிடைக்காத உத்தியோகத்திற்குப் போட்டி போடுவதைக்காட்டினும், நம் வாழ்க்கைக்குரிய தொழில்களை நடத்தப்போதுமான கல்வியைக் கற்றுக்கொண்டு விவசாயம் முதலிய தொழில்களில் ஒன்றைக் கைக்கொண்டால் மிகுந்த நன்மையுண்டாகும். உத்தியோக விருப்பமுள்ளவர்கள் சுலபமாக இடங்கள் கிடைத்தால் மாத்திரம் அவற்றில் புகுந்து கொள்ளலாம்.

ஒருவர் செய்யும் ஒரு தொழிலில் பலரும் போட்டிபோடுவதை விடுத்து ஒவ்வொருவரும் தனித்தனி ஒவ்வொரு தொழிலை மேற்கொள்வதால் அவர்க்கு விசேஷ இலாபங்கிடைக்கும். அதிகச் செலவிற்கேதுவாகிய அன்னிய நாட்டாசாரங்கள், புறநாட்டுப் பொருள்கள், இடம்பமான காரியங்கள், வீண்காரியங்கள் முதலியவற்றை ஒழிப்பதால் செல்வம் ஓங்கி வளர்தற் கேதுவாகும்.

நாம் இங்குக் கூறியவற்றுள் விலக்கத்தக்கவற்றை விலக்கி, கொள்ளத்தக்கவற்றைக்கொள்வோமானால் எப்பொழுதும் சுகம்பெறலாம். நம்நாடு பொன்னாடாக விளங்கும். நாம் அடிமைத்தனத்தினின்றும் நீங்கி ஆனந்தவாழ்வில் அமரலாம். எல்லாம்வல்ல இறைவன் நம்மெல்லோரையும் நன்னெறிக்குட் புகுத்தி உய்வித்தருள்வானாக. ஓம் தத் ஸத்.

---

# தேசநலப்பகுதி.

## தேசபந்து தாஸர்.

இப்பூவுலகின்கண் பலவிதத்திலும் சிறந்து விளங்கும் நம் பாரத நாட்டிலே அடிக்கடி பல பெரியோர்களும், ஞானிகளும், மகான்களும் தோன்றியிருக்கின்றனர். உலகத்திலுள்ள பல நாட்டவரும் நம் தாய்நாடாகிய இந்தி

யாவைப் புகழ்ந்து பேசுவதற்கு அப்பெரியார்கள் நமது நாட்டில் தோன்றியதே முக்கிய காரணமாகும். அவர்கள் சத்தியத்திற்காகவும், மதத்திற்காகவும், தேசத்திற்காகவும் செய்திருக்கின்ற காரியங்கள் அளவிடற்பாலனவல்ல. ஆனால் எல்லாம்வல்ல இறைவன் மிகுந்த கருணையுடன் அடிக்கடி நமக்கு அப்படிப்பட்ட பெரியார்களை அளித்தபோதிலும், நம் நாட்டவரில் எத்துணை பேர் அந்த உத்தமர்களின் உபதேசங்களைக் கேட்டு, அவைகளை நன்கு உணர்ந்து, அவர்கள் காட்டியிருக்கின்ற சிறந்த வழிகளைப்பற்றி நடந்து வருகின்றார்கள்? நமது நாட்டில் அப்பெரியார்களின் வழிபற்றித் தம் கடனாற்றி வருகின்றவர்களின் தொகை மிகவும் குறைவு என்பதை எவரும் மறுத்துக் கூறல் முடியாது. பொதுவாகத் தற்காலம் நமது நாட்டின் நிலையை உற்று நோக்கினால் நம் நாட்டு மக்களில் பெரும்பான்மையோர், நம்முன்னோர்களின் அரிய வழிகளை யெல்லாம் அறவே புறக்கணித்து மேல்நாட்டு நாகரீகம்,நடை,உடை, பாவனை இவைகளில் மிகுந்த பற்றுடையவர்களாய்த் தங்களது வாழ்நாட்களை யெல்லாம் வீணாகக் கழித்து வருகின்றனர். அந்தோ! இதைவிடக் கஷ்டமான நிலைமை நம் நாட்டிற்கு வேறு உண்டோ! உலகிலுள்ள மற்ற தேசத்தவர்கள் நம் நாட்டுப் பெரியார்களின் பெருமையை நன்கு உணர்ந்து,அவர்களது உபதேச மொழிகளைப் பின்பற்றி நடக்க ஈதுபோழ்து முயன்று வருகின்றனர். ஆனால் நம் நாட்டிலுள்ளவர்களில் பெரும்பான்மையருக்கு நம் நாட்டில் தோன்றிய பெரியார்களைப்பற்றியும், அவர்களுடைய உபதேசங்களைப்பற்றியும், அவர்களுடைய ஜீவிய சரித்திரங்களைப்பற்றியும் ஒன்றுமே தெரியாது. நமது நாட்டில் தோன்றிய பெரியார்கள், ஞானிகள், மஹான்கள் இவர்களைப் போல் மற்ற நாடுகளில் எவரேனும் தோன்றி யிருக்கின்றார்களா? தோன்றவில்லை. பண்டை நாட்களில் உலகிற்கு அறவழியையும், ஞானத்தையும் போதித்த நாடு நமது தாய்த்திருநாடாகிய பாரதநாடல்லவா? அப்படிப்பட்ட நம் தாய்நாடு இதுபோழ்து எந்நிலையிலிருக்கின்றது? செல்வத்திலும், நாகரிகத்திலும், கைத்தொழில்களிலும், வாணிபத்திலும் பண்டை நாட்களில் சிறந்து விளங்கிய நம் நாடு இதுபோது வறுமைப்பிணிக்குள்ளாகிக் கேவலமான நிலைமையை அடைந்திருப்பதற்குக் காரணம் என்ன? "மூத்தோர்சொல் வார்த்தையமிர்தம்" என்ற முதுமொழியைப் புறக்கணித்து நம் நாட்டு மக்கள் நடந்ததினாலன்றோ நமது நாட்டிற்கு இந்தக் கஷ்டமான நிலை ஏற்பட்டது! நமது நாடு முன்போல் சீரும், சிறப்பும் பெற்று விளங்கவேண்டுமானால், நாம் நமது பெரியாரையே துணைக்கொண்டு நம் கடனாற்ற முற்படவேண்டும். எனவே இனியாவது நமது தமிழ்நாட்டு மக்கள், நாட்டுப் பெரியார்களின் அரிய உபதேசங்களை நன்கு உணர்ந்து, அவர்கள் காட்டியுள்ள சிறந்த வழிகளைப் பின்பற்றித் தம் கடனாற்ற முற்படும்படி நான் பன்முறையும் வேண்டிக் கொள்ளுகின்றேன். நம் நாட்டில் அவதரித்த பெரியார்களில் காலஞ்சென்ற தேசபந்து தாஸரும் ஒருவர். உலகம்போற்ற உடம்பெடுத்த அத் தியாக மூர்த்தியின் சரித்திரத்தைத் தமிழ்மக்கள் ஒவ்வொருவரும் தெரிந்துகொள்ளவேண்டியது மிகவும் அவசியமாகும்.

## பிறப்பு.

இராஜபோகத்தைத் துறந்த வங்கநாட்டுத் தியாகி-ஸ்ரீமான். சித்தரஞ்சன தாஸர் 1870-ம் வருஷம், நவம்பர் மாதம் 5-ந் தேதியன்று வங்காளத்தின் தலை நகராக விளங்கும் கல்கத்தா நகரத்திலே பிறந்தார். தேசபந்துவின் முன்னோர்கள் ஒருகாலத்தில் தேசத்தை ஆளும் மன்னர்களாக இருந்தார்கள் என்று பல வங்கநாட்டுப் பெரியோர்கள் சொல்லுகின்றார்கள். தைரியம், மரியாதை, சுயேச்சை, பக்தி, அறிவு முதலிய பல அரிய குணங்கள் தேசபந்துவின் குடும்பத்திற்கு ஆபரணமாக இன்னும் விளங்கி வருகின்றன. பிறர்க்கு உபகாரம் செய்வதையே தாஸரது பெற்றோர்கள் தங்களது கடமையாகக் கொண்டிருந்தார்கள். இப்படிப்பட்ட ஒரு சிறந்த குடும்பத்திலேதான் தேசபந்து தாஸர் தோன்றினார். இவரது தந்தை **பாபு பூபன் மோகனதாஸர்.** அவர் கல்கத்தா நகரிலுள்ள உயர்தர நீதிமன்றத்தில் மிகவும் பிரசித்திபெற்ற ஓர் அட்டர்னியாய்த் தொழில் நடத்திவந்தார். அட்டர்னி வேலையிலிருந்து கொண்டே அவர் மிகுந்த கீர்த்தியுடன் அதிகமான பொருளையும் சம்பாதித்தார். அவர் தாம் சம்பாதித்த பொருள்களை யெல்லாம் பிறர்க்கு உபகாரம் செய்வதிலேயே செலவு செய்து வந்தார். அவரது தயாளகுணமும் தருமமும் அவரது அருமைக் குமாரரான தேசபந்துவுக்கும் உதித்ததுபோலும்! தாஸரின் தந்தையார் அட்டர்னி வேலையிலேயே தமது காலத்தைக் கழிக்காமல் "பிரமோ பப்ளிக் ஒபீனியன்" "வங்காளி பப்ளிக் ஒபீனியன்" என்ற இரண்டு பத்திரிகைகளுக்கும் ஆசிரியராக இருந்து அவைகளைத் திறம்பட நடத்திவந்தார். அவர் பிரம்மசமாஜ இயக்கத்தில் சேர்ந்து அதற்காக மிகவும் உழைத்துவந்தார். தேசபக்தியில் பாபுபூபன் சிறிதும் குறைந்தவரல்லர். அவர் தமது எளிய உறவினர்களுக்கும், மற்றவர்களுக்கும் எப்பொழுதும் வேண்டிய உதவிகளையெல்லாம் விருப்புடன் செய்துவந்தார். அதன்பயனாக அவருக்கு வரவுக்கு அதிகமாகச் செலவு ஏற்பட்டது. வரவுக்குமிஞ்சிச் செலவு செய்ததினால் அவருக்கு நாளுக்குநாள் கடன் மிகவும் அதிகமாகிக்கொண்டே வந்தது. அதனால் அவர் தமது சொத்துக்களையெல்லாம் இழந்துவிட்டதுமன்றி இன்ஸால்வெண்டும் கொடுக்கும்படி நேர்ந்தது.

தேசபந்துவுக்குப் பல சகோதரர்களும் சகோதரிகளும் இருக்கிறார்கள். அவருடைய சகோதரர்களில் ஒருவரான ஸ்ரீமான்-பி. ஆர். தாஸர் இதுபோழ்து பாடலீபுரத்திலுள்ள உயர்தர நீதிமன்றத்தில் (ஹைகோர்ட்டு) நீதிபதியாக இருக்கிறார். மற்றொரு சகோதரரான ஸ்ரீமான் எஸ். ஆர். தாஸர் கல்கத்தாவில் இதுவரையில் அட்வகேட் ஜெனரலாக இருந்து இப்பொழுது இந்திய அரசாங்கத்தின் சட்ட நிபுணராக வேலைபார்த்து வருகின்றார். தேசபந்துவின் சகோதரிகளில் இருவர் மகாத்மா காந்தியின் ஒத்துழையா இயக்கத்தில் சேர்ந்து தேசத்தொண்டு புரிந்துவந்தனர். அத்தொண்டு என்றும் மறக்கக் கூடியதன்று.

## கல்வி.

பாபு பூபன்மோகன தாஸருக்கு, தேசபந்து தாஸர் இரண்டாவது குமாரராவர். தேசபந்து இளமையில் பவானிபூரிலுள்ள லண்டன் மிஷன் கல்லூரியில் படித்து 1886-ம் வருஷத்தில் மெட்ரிகுலேஷன் பரீட்சையில் தேறினர். பின்னர் அவர் கல்கத்தா மாகாணக் கல்லூரியில் படித்து 1890-ம் ஆண்டில் சிறப்புடன் பீ. ஏ. பட்டம் பெற்றார். பின்பு அவர் ஐ. ஸி. எஸ். பரீட்சைக்குப் படிக்கவேண்டுமென்ற நோக்கத்துடன் இங்கிலாந்து தேசத்திற்குச் சென்றார்.

## இங்கிலாந்தில் அவரது ஊழியம்.

தேசபந்து இங்கிலாந்து தேசத்திற்குச் சென்றபொழுது "இந்தியாவின் பெருங்கிழவர்" என்று அழைக்கப்படும், ஸ்ரீமான்-தாதாபாய் நௌரோஜி பார்லிமெண்ட் மகாசபைத் தேர்தலில் ஓர் அபேக்ஷகராக நின்றார். தேசபந்து தாஸ் தாதாபாய்க்குச் சாதகமாக மிகுந்த ஊக்கத்துடன் பல இடங்களுக்குச் சென்று சென்று அவ்விடங்களிலெல்லாம் அரிய சொற்பொழிவுகளை நிகழ்த்தினர். அக்காலத்தில் அவர் செய்த சொற்பொழிவுகளே இந்தியாவில் உள்ளவர்களையும், இங்கிலாந்தில் உள்ளவர்களையும் விழித்துக்கொள்ளும்படி செய்துவிட்டன. பின்பு ஜான் மாக்ளீன் என்ற பார்லிமெண்டு அங்கத்தினர் தாம் செய்த ஒரு பிரசங்கத்தில் ஹிந்துக்களையும் முஸ்லிம்களையும் தாக்கி வாயில் வந்தபடியெல்லாம் அவமதித்துப் பேசினர். ஜான் மாக்ளீன் செய்த பிரசங்கத்தைக் கேட்டதும் தேசபந்து தாஸருக்கு மிகுந்த ஆத்திரமும், கோபமும் ஏற்பட்டன. உடனே அவர் ஜான் மாக்ளீன் செய்த பிரசங்கத்தைக் கண்டிக்க ஒருபெரிய கூட்டம் கூட்டி, அதில் அவரைப் பலமாகக் கண்டித்துப் பேசினர். அதன் பயனாக ஜான் மாக்ளீன் தாம் செய்த பிரசங்கத்திற்கு மன்னிப்புக் கேட்கும்படி வற்புறுத்தப்பட்டதுடன், பார்லிமெண்ட் மகாசபையில் வகித்துவந்த அங்கத்தினர் பதவியையும் இழக்கும்படி நேர்ந்தது.

பின்பு தாஸர் இங்கிலாந்தில் அப்பொழுது பிரதம மந்திரியாக இருந்த ஸ்ரீமான்-கிளாட்ஸ்டனின் தலைமையில் இந்தியாவின் விஷயங்களைப்பற்றி ஓர் அரிய உபந்யாசம் செய்தார். பிறகு அவர் தமக்கு ஏற்பட்ட சில தடைகளின் பயனாக ஐ. ஸி. எஸ். பரீட்சைக்குப் படித்தல் முடியாமல் போயிற்று. ஆகவே அவர் அதற்குப் படிக்காமல் பாரிஸ்டர் பரீட்சைக்குப் படித்து அதில் சிறப்புடன் தேறி 1893-ம் வருஷத்தில் இந்தியாவுக்குத் திரும்பிவந்தார்.

## பாரிஸ்டர் வேலை.

கல்கத்தா நகருக்கு வந்ததும் முதல் முதலாக அவர் அங்கேயே தமது பாரிஸ்டர் (நியாயவாதி) தொழிலை நடத்துவதற்கு ஆரம்பித்தார். அவரது தந்தையார் தாம்வாங்கிய கடன்களைத் திரும்பக் கொடுக்காமல் இன்சால்வெண்டு கொடுத்தவராதலால் அஃது தேசபந்துவின் அபிவிருத்திக்கே ஒரு பெருந்தடையாக இருந்தது. தமது தந்தையின் கடன்களை யெல்லாம் திரும்பக் கொடுத்துத் தமது குடும்பத்திற்கு ஏற்பட்டிருந்த கெட்டபெயரை நீக்கிக்

கொள்ளவேண்டு மென்று அவர் மிகவும் பாடுபட்டு உழைத்துவந்தார். அத ஞல் பொது விஷயங்களிலும், நாட்டு விஷயங்களிலும் கலந்து உழைக்க அவருக்குச் சில ஆண்டுகள் வரையில் அவகாசம் கிடைக்கவேயில்லை. கல்கத்தா உயர்தர நீதிமன்றத்தில் முதல் முதலில் தேசபந்துவுக்குப் போதிய வருமானம் கிடைக்கவில்லை. அக்காரணத்தால் அவர் சிறிதுகாலம் வெளியூர்களுக்குச் சென்று அங்குத்தமது தொழிலை நடத்திவந்தார். தமது குடும்பத்திற்கு "இன்சால்வெண்ட் குடும்பம்" என்ற கெட்டபெய ரில்லாமல் செய்துவிட வேண்டு மென்று அவர்செய்த முயற்சிகள் எண்ணில. அவருக்கேற்பட்ட குடும்பத் தொந்திரவுகளினலேயே அவரது பெருமை முதலில் சில ஆண்டுகள் வரையில் பொதுஜனங்களுக்குத் தெரியவில்லை.

1908-ம் வருஷத்தில், சுதேச இயக்கத்தில் உழைத்துவந்த வங்கநாட்டுப் பெரியார் பாபு அரவிந்தகோஷ் முதலியவர்கள் சதியாலோசனை செய்ததாக அரசாங்கத்தார் அவர்களின் மீது ஒரு பெரும்வழக்குத் தொடுத்தனர். அந்த வழக்கில் தேசபந்துதாஸர், மகரிஷி அரவிந்தருக்காக நீதிமன்றத்தில் ஆஜராகி மிகுந்த திறமையுடன் வாதித்தார். அவரது சட்டஞானமும் திறமையும் அப்பொழுதுதான் வங்காளத்தி லுள்ளவர்களுக்குத் தெரியவந்தன. சித்தரஞ்சனரின் திறமையான வாதத்தின்பயனுக பாபு அரவிந்தகோஷ் விடுதலையடைந்தார். பாபு அரவிந்தகோஷ் விடுதலையடைந்ததும், தேசபந்துதாஸரின் திறமையும், கீர்த்தியும் எங்கும் கதிரொளிபோல் பரவ ஆரம்பித்தன. பின்பு தாஸர் தமது நியாயவாதித் தொழிலைக் கல்கத்தாநகரிலேயே நடத்துவதற்கு ஆரம்பித்தார். கல்கத்தாவில் அவருக்கு நாளுக்குநாள் வருமானம் அதிகரித்துக்கொண்டே வந்தது. தமது தந்தையின் கடன்களைத் தீர்த்துத் தமது குடும்பத்திற்கு ஏற்பட்டிருந்த கெட்டபெயரை நீக்கிக்கொள்ள வேண்டு மென்று தாம்செய்து கொண்ட உறுதியை அவர் நிறைவேற்ற ஆரம்பித்தார். சில ஆண்டுகளுக்குள் தாஸர் தமது தந்தையாருக்கு ஏற்பட்டிருந்த சுமார்பதினறுலட்சம் (1600000) ரூபாய்க் கடனையும் தீர்த்துவிட்டார்.

பின்பு அவர், தம்மை இன்ஸால்வெண்டு பந்தத்திலிருந்து விடுதலை செய்யவேண்டுமென்று கல்கத்தா உயர்தர நீதிமன்றத்தில் மனுச்செய்து கொண்டார். அப்பொழுது நீதிபதியாயிருந்த ஸ்ரீமான்-பிளெட்சர், தாஸரின் மனுவை ஏற்றுக்கொண்டு, "இன்சால்வெண்டாகப்போன ஒருவரின் பழைய கடன்களை மற்ருெருவர் ஏற்றுக்கொண்டு அவைகளை யெல்லாம் திருப்பிக்கொடுத்து இன்சால்வெண்டு பந்தத்தினின்றும் தம்மைவிடுவித்துக் கொள்ளுவது இதுவே முதல்தடவை; இதுவரையில் தாஸரைத்தவிர வேறு ஒருவரும் அப்படிச் செய்யவேயில்லை" என்றுகூறித் தேசபந்துவின் செய்கையை மிகவும் புகழ்ந்து பேசினர். இச்செய்கையின் பயனுக வங்காளத்திலிருந்த பொதுஜனங்களுக்கு தாஸரிடத்தில் மிகுந்த மரியாதையும், நம்பிக்கையும் ஏற்பட்டன.

## இலக்கிய ஆராய்ச்சி.

கல்வியிலும், இலக்கிய ஆராய்ச்சியிலும் தேசபந்துவுக்கு மிகுந்த பற்றுண்டு. ஆதலின் அவர் பின்பு இலக்கிய ஆராய்ச்சியில் தமது கவனத்தைச் செலுத்திவந்தார். 1915-ம் ஆண்டில் அவர், தாமே "நாராயணு" என்ற பத்திரிகையை ஆரம்பித்து நடத்திவந்தார். அந்தப் பத்திரிகைக்கு மஹாமஹோபாத்தியாய ஹரப்பிரஸாத சாஸ்திரி, விபின்சந்திரபாலர்போன்ற பல அறிஞர்கள் அடிக்கடி கட்டுரைகள் எழுதிவந்தனர். தேசபந்து தாஸருக்குப் புதியதுறையில் கவிகள் இயற்றுவதில் அபாரமான திறமையும், சக்தியும் உண்டு. தேசபந்துவின் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் எல்லோரும் கவி இயற்றும் சக்தி அமையப் பெற்றவர்களாய் விளங்குகின்றனர்.

1894-95-ம் வருஷத்தில் தாஸர் வங்காளி பாஷையில் பல அருங்கவிகளடங்கிய "மஞ்சலா" என்ற நூலை வெளியிட்டது மன்றி இன்னும் பல சிறந்த நூல்களையும் வெளியிட்டிருக்கின்முர். தேசபந்துவின் அறிவையும், திறமையையுங் கண்ட வங்காள இலக்கிய சங்கத்தார் அவரை ஒருவருஷம் தங்களது சங்கத்தின் தலைவராகத் தெரிந்தெடுத்துக் கௌரவித்தனர்.

## தேச சேவை.

பின்னர் தாஸர், நாளுக்குநாள் தேசவிஷயங்களிலும் அரசியல் விஷயங்களிலும் தீவிரமாகத் தலையிட்டு உழைப்பதற்கு ஆரம்பித்தார். அவரது தேசபக்தி மாசற்றது; உண்மையானது. தற்காலத்தில் நமது நாட்டில் சிலர் தமது சுயநலங்கருதி தேசசேவை செய்கின்ருேமெனப் பறையடித்து வருகின்முர்கள். ஆனல் தேசபந்து தமது சுயநலங்கருதித் தேசசேவையில் ஈடுபட்டாரில்லை. அவரது சுயநலமின்மை, தியாகம், தருமசிந்தனை, தைரியம், திறமை, ஞானம் முதலியவைகள் அவரை உலகிற்கே ஒரு பெருந்தியாகியாகச் செய்துவிட்டன. அவர் ஒரு தீவிர காங்கிரஸ் வாதியாக இருந்தார். அவர் தமது நியாயவாதித்தொழிலை நடத்திவந்த காலத்திலும் தேசசேவையைச் சிறிதும் மறந்தாரில்லை. தேசத்தின் பொருட்டுத் தாம் அனுபவித்து வந்த இராஜபோகத்தைத் துறந்து, தமது தொழிலையும்விட்டு அவர்செய்துவந்த ஊழியம் என்றும் மறக்கற்பாலதன்று. அவரது தியாகமும், கொடையும் இன்று இந்தியாவுக்கே ஒளியாக விளங்குகின்றன. (தொடரும்)

திரு. கே. சுப்பிரமணியம்.

---

## மகாத்மா காந்தியின் யோசனை.

மகாத்மாகாந்தி இந்தியாவின் சக்ரவர்த்தியாயிருந்தால், தென்னுப்பிரிக்காவில் ஐரோப்பியர்கள், இந்தியர்களுக்கு ஏற்படுத்தும் தடையையே இந்தியாவிலும் ஐரோப்பியர்கள் விஷயத்தில் ஏற்படுத்துவார் என்ற கருத்துப்பட ஸ்ரீமான்-ஸ்பெண்டர் என்பவர் "வெஸ்ட் மினிஸ்டர் கெஜட்" பத்திரிகையில் எழுதியிருந்தார். அதற்குப் பதிலாக மகாத்மாகாந்தி "யங் இந்தியா" பத்திரிகையில் பின்வருமாறு எழுதியிருக்கிறுர்.

நான் இந்தியாவின் சக்ரவர்த்தியாயிருந்தால், ஜாதி மத வேற்றுமையின்றி உலக முழுவதற்கும் சிநேகப் பான்மையுடன் என் கையை நீட்டுவேன். மனித சமூகம் முழுவதும் ஒரே கடவுளின் குழந்தைகளே. மனித சமூகத்தைச் சேர்ந்த ஒவ்வொரு மனிதனுக்கும் தன்னைத் தான் அறியக்கூடிய சக்தியை அடையத் திறமையுண்டு. இந்தியாவை ஆக்ரமித்துக்கொண்டிருக்கும் இராணுவ முழுவதையும் கலைத்துவிடுவேன். கொள்ளைக்காரர்கள், திருடர்கள் இவர்களுடைய பயமின்றி ஜனங்கள் வாழ்வதற்குப் போதுமான போலீஸ் படையை மாத்திரம் வைத்துக்கொண்டிருப்பேன். எல்லைப்புற ஜாதியினருக்கு இப்பொழுது லஞ்சம்கொடுத்து அவர்களைச் சமாதானப்படுத்தி வைப்பதுபோல் நான் இருக்கமாட்டேன். அவர்களுடன் நட்புமுறையில் பழகி அவர்களிடையே சீர்திருத்தக்காரர்களை அனுப்பி அவர்களை நல்ல வழிக்குத் திருப்புவேன். இந்தியாவில் வசிக்கும் ஐரோப்பியருக்கும், கௌரவமான ஐரோப்பிய வியாபாரங்களுக்கும் பூரணமான பாதுகாப்பு கொடுப்பதாக நான் உறுதி கொடுப்பேன். இந்தியாவில் இறக்குமதி செய்யப்படும் அந்நிய ஜவுளிகளின்மீது வரி விதிப்பேன்.

கிராமத்தில் வசிப்பவர்களுக்கு உதவிசெய்யும் எண்ணத்துடன், அன்னிய தேசத்திலிருந்து இந்நாட்டிற்கு வரும் துணிகளின்மீது கடுமையான இறக்குமதி வரியைப் போடுவேன். நமது நாட்டில் ஆங்காங்கு ராட்டைகளில் நூல் நூற்று வருபவர்களுக்கு இதினின்றும், தங்களது நூலுக்கு கிராக்கி யிருக்குமென்று நன்கு தெரியும். மதுபான இறக்குமதியை முழுவதும் தடுத்துவிடுவேன். எல்லாவித மதத்தினர்களும், அவரவர்கள் தங்கள் தங்கள் பிரார்த்தனைகளைச் செய்யுமாறு அவர்களுக்குக் காவலளிப்பேன். மனித ஜாதியின் நேர்மையான தர்ம வழிக்கு எதிராக எது இருந்தபோதிலும், அதைத் தடைசெய்வேன். எல்லாப் பொதுத் தெருக்களிலும், பொது ஆலயங்களுக்குள்ளும், தீண்டாதவர்கள் எனப்படும் ஜாதியார் மற்ற இந்துக்களைப்போன்று செல்லலாமென அனுமதி அளிப்பேன். ஹிந்து வகுப்பினரின் பிரதிநிதிகள் முஸ்லீம் வகுப்பினரின் பிரதிநிதிகள், இவர்களை வரவழைத்து, அவர்களது பைகளிலுள்ள உணவுப் பதார்த்தங்களையும், ஆயுதங்களையும் பிடுங்கிக்கொண்டு, அவர்களை ஓர் அறையில் போட்டு நன்ருய்ப் பூட்டிவிட்டு அவர்களுக்குள்ள சண்டை சச்சரவுகளைப்பற்றிச் சமாதானம் செய்துகொண்டால்தான் அவர்களை வெளியே விடமுடியும் எனச் செப்புவேன். இன்னும் அநேக வேலைகளை நான் சக்கரவர்த்தியாக விருந்தால் செய்வேன். ஆனல் இம்மாதிரி நேரிடுவதற்கு இடமில்லையாதலால், என்னைப்போலொத்த மனோபாவத்தையுடையவர்கள் என்னென்ன காரியங்களைச் செய்வார்கள் என்பதைக் காட்டுவதற்கு இது போதுமானதாகும். எங்களைக் கனவுகாண்போர் என்று தவருக அழைக்கப்படுகின்றது. ஆனல் நாங்கள் எல்லோரும், அனுபவ வழியாய் யாவற்றையும் தெரிந்துகொண்டிருக்கிருேமென்று நாங்கள் எண்ணுகிருேம். அதிக ஏழையாயிருப்பவர்களின் அவசியத்தையும் தெரிந்துகொண்டு எங்களுக்குச் சக்தியிருக்கும் பட்சத்தில், அவைகளையும் நாங்கள் தீர்ப்போம். **கு-ரா.**

# அறநெறிப்பகுதி.

## நாலடியார் வசனம்.

(தொகுதி 11, 472-ம் பக்கத் தொடர்ச்சி.)

### 39-ம் அதிகாரம்-கற்புடை மகளிர். (பதிவிரதைகளின் தன்மை.)

பெறுதற்கரிய கற்பினையுடைய இந்திராணிக்குச் சமதையான மிகக் கீர்த்தி பொருந்திய மனைவியானாலும், இச்சை கொண்டு (தன்னைப்) பெற்றுக் கூடவேண்டு மென்னுமாசையால், தன் னழகைக்கண்டு பின்னால் நிற்கும் புருஷர் இல்லாமையாகிய நல்லொழுக்கத்தையே விரும்பிப் போற்றுகின்ற அழகிய நெற்றியை யுடையவளே (கணவனுக்கு) நல்ல துணையாவாள். (தன்னைப் பார்த்துப் பிறர் ஆசை கொள்ளாமலிருக்குமாறு தன்னை அலங்கரித்துக்கொள்ளாமலிருப்பவளே கற்புடைய மனைவியாவாள் என்பது கருத்து.) (1)

(உண்பதற்கு வேறு பண்ட மில்லாமையால்) ஒரு குடம் நீரையே காய்ச்சிக் குடிக்கும்படியான தரித்திரம் வந்த காலத்திலும், கடல் நீர் முழுவதையும் உண்ணும்படியான (பெருங்கூட்டமான) உறவினர் வந்தாலும் (தான் செய்யவேண்டிய) கடமையாகிய குணங்களை நல்லொழுக்க நெறியாகக் கொண்டிருக்கும் பெண்ணே இல்லற வாழ்க்கைக்குரிய பெருமை யுடையவளாவாள். (2)

(தான் வசிக்கும் வீடானது) நாற்புறங்களிலும் வழியுடையதாய் மிகவும் சிறியதாய் எவ்விடத்திலும் மேலிருந்து தன்மேல் மழைநீர் வழியும்படியான ஒழுக்குடைய வீடாயிருந்தாலும், சிறந்த தருமங்களைச் செய்யவல்லவளாய்த் தான் வாழும் ஊரிலுள்ளோர் தன்னைப் புகழும்படியான மாட்சிமை பொருந்திய கற்புடை மனைவி வசிப்பதே வீடாகும். (3)

கண்ணுக் கினிய ரூபவதியாய், கணவன் பிரியப்படி தன்னை அலங்கரித்துக் கொள்பவளாய், அச்சமுடையவளாய், ஊரார்க்கு நாணத்தக்க குணமுடையவளாய், நாயகனுக்குப் பயந்து, சமயமறிந்து (கணவனோடு) பிணங்கி இன்பத்துடன் புணரும் சமயத்தை (நன்றாக) அறிந்து கூடிக் களிப்பையுண்டாக்கும் மெல்லிய சொற்களை யுடைய பெண்ணே கற்புடைப் பெண்ணாவாள். (4)

எம்முடைய நாயகர் தினந்தோறும் எமது தோள்களின்மேல் சேர்ந்தெழுந்திருந்தாலும், (புதிதாக விவாகம் செய்து கொண்ட) அக்காலத்தில் நாம் பார்த்ததுபோலவே (இன்னமும்) நாணமடைகின்றோம். (அப்படியிருக்க) எந்நாளும் பொருளாசையால் பலபேருடைய மார்புகளைச் சேர்ந்தொழுகும் வேசையர் (பலரிடத்தும் நாணமின்றி அடிக்கடி கூடி அவர்களுக்கு)உரியவர்களா யிருக்கின்றனரே! (இது) என்ன தன்மையோ! (இது குலமக ளொருத்தி வேசையரைப் பழித்துக் கூறியது). (5)

(நாணமில்லாதவள் பெற்ற அழகானது) இதயத்தில் அறிவுடைவன் கற்ற நூலறிவு போலவும், தருமகுணங் கொண்டவனிடத்திலுள்ள சிறந்த செல்வம் போலவும் பொதுவாகப் பலர்க்கும் உரியதாகும். நாணமுடையவளின் அழகானது மிகச் சிறந்த சுத்தவீரன் கையிலுள்ள கூர்மையான வாளாயுதத்திற்குச் சமமாகும். (சுத்த வீரன் கையிலுள்ள வாளானது அவன் உயிரோடிருக்கும் வரையில் பகைவர்கையில் அகப்படாது. அதுபோல, நாணமுள்ள பெண்ணின் அழகும் அவள் உயிரோடிருக்கும் வரையில் அன்னியர் வசமாகாது.) (6)

(குலஸ்திரீயோடு) முழுவதும் சமமாகாத வேசையரைக் கூடிய மலை போன்ற மார்பையுடையவராகிய என் தலைவர் நீராடாமல் என்னையும் சேர வருகின்றார். (இது எப்படி யிருக்கிறதென்றால்) கறுப்புக் கொள்ளையும் சிவப்புக் கொள்ளையும் (சமமாகக் கருதி) பணத்துக்குத் துணிப்பதக்காக வாங்கினாற்போ லிருக்கின்றது. (கருங்கொள்ளையும் செங்கொள்ளையும் சமமாகக்கருதி வாங்கின கதைபோல, என் கணவர் வேசையையும் என்னையும் சமமாகக் கருதிவிட்டாரே என்று ஒரு கற்புடைப் பெண் கூறியது.) (7)

ஓ* பாணனே! (நீ என் தலைவரைப்பற்றிய) தூஷண வார்த்தைகளை (என்னெதிரில்) சொல்லாதே. (அப்படிச்) சொல்வதாயிருந்தால் யாம் எமது நாயகருக்கு உடுக்கையின் இடப்பக்கத்தைப்போல (ப்பயன்படாமல்) இருக்கின்றோ மாகையால், உன் அடிகளை மெல்ல வைத்துப் பதுங்கிக்கொண்டு போய் (உடுக்கையின்) வலப்பக்கம்போலப் பயன் படுகின்ற பரத்தையர்க்குச் சொல்வாயாக. (கற்புடைய மாதர் தம் கணவரைப்பற்றிய தூஷணைகளைக் கேட்கச் சகிக்கமாட்டாரென்பது இதில் குறிப்பாக விளங்குதல் காண்க. (8)

கோரையைப் பிடுங்கினவளவில் தண்ணீர் விளங்கப்பெற்ற குளிர்ந்த வயலையுடைய எனது நாயகர்மேல், ஈ பறப்பதைக்காண (ச் சகிக்காமல்) மனம் நொந்தவளும் நானே. (இப்போது) தீப்பொறி பறக்க, வேசையரது மார்பை இறுக்கத்தழுவிய குளிர்ந்த சந்தனமணிந்த மார்பைப்பார்த்துச் சகித்துக் கொண்டிருந்தவளும் நானே. ('வேசையரிட மிருந்துவிட்டு வந்த கணவனைக் கோபித்துக்கொள்ளாம லிருப்பதென்ன?' என்ற தோழிக்குக் கற்புடைய மனைவி கூறியது இது. இதனால் கற்புடைய மாதர் கணவரது குற்றத்தைப் பாராட்டமாட்டாரென்பது விளங்குகின்றது.) (9)

பாணனே! அரும்புகள் மலரப்பெற்ற மலர்மாலையை யணிந்த தலைவர் எமக்கு அருள் செய்வார் என்று பெரிய பொய்யை (என்னிடம்) சொல்லாதே.நான் (எனது) நாயகருக்குக் கரும்பின் கடைசியிலுள்ள கணுக்களைப் போல ருசி குறைந்திருக்கின்றேன். (ஆகையால் இந்த வார்த்தையை) (கரும்பின்) இடையிலுள்ள கணுக்களைப்போல, (அவருக்கு இனிமை மிகுந்து) உள்ள பரத்தையரிடம் (போய்ச்) சொல். (10)

(தொடரும்) **பூ. ஸ்ரீநிவாசன்**, தமிழ்ப்பண்டிதர், சித்தூர்.

---

* பாணர்-தென்னாட்டில் பாட்டுப்பாடிப் பிழைக்கும் ஓர் வகைச் சாதியார்; இவர்கள் தலைவன் தலைவியரிடத்தில் தூது செல்வது முண்டு.

## ஆரிய சித்தாந்தம்.

(தொகுதி 11, 475-ம் பக்கத் தொடர்ச்சி.)

### குரு.

இவ்வாறு கருவிகாரணாதிகளைப் பெற்றுத் தாயின் வயிற்றிலிருந்து பூமியிற் பிறந்து முதலில் அறிவது தன் தாயையே. தாயே அதற்குத் தன் சத்தாகிய பாலை ஊட்டி போஷித்து வளர்க்கிறாள். ஆணெல்லாம் சிவசொரூபம், பெண்களெல்லாம் உமா சொரூபம் என்கிற வேதசாஸ்திர சம்மதத்தினால் உமா சொரூபமாகிய தாய் அந்தச் சிசுவுக்குத் தெய்வமேயாகிறாள். தெய்வத்தின் சிறந்த குணமாகிய கருணையே வடிவமாயிருந்து அந்தக் குழந்தைக்கு எவ்விதக் கெடுதியும் சம்பவியாதபடி பாதுகாத்துப் போஷிக்கிறாள். இவ்வாறு போஷித்து வளர்ப்பதனால் ஞானக் கருவிகள் பலப்பட்டு எல்லாவற்றையும் பார்க்கவும், கேட்கவும் சக்திபெறுகின்றன.

தாய்க்குத் தன் கணவனே தெய்வம் என்பது நூல்களின் சம்மதமும் நூல்களை யுணராத பெரியோர்களின் சம்மதமுமென்பது மறக்கப்படாத உண்மை. தாயாகிய தெய்வத்தையே முதலில் குழந்தை அறியும். பிறகு தாயானவள் தான் வழிபடுந் தெய்வமாகிய தன் நாயகனைக் குழந்தைக்கு "அப்பா" என்று கூறித் தெரிவிப்பாள். அது இரண்டாவது தன் தந்தையாகிய தெய்வத்தையும் அறியும். தாய் காட்டாவிடிற் சிசு தகப்பனை யறியாது. தாய் பலமுறை காட்டி "அப்பா" வென்று கூறித் தெரிவிப்பதினாலேயே அது பிதாவைத் தெரிந்துகொள்ளும். மாதா பிதா இருவரும் கருணை வடிவமாயிருந்து புத்திரனைப் பரிபாலிப்பதால் அவ்விருவரும் குழந்தைக்குத் தெய்வமாகிறார்கள். இதனாலேதான் "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வ" மென்று ஔவையார் கூறி யருளினார். குழந்தை முதலில் தாயையும் தாய்மூலமாய்ப் பிதாவையும் அறிவதனாலேயே நூல்களெல்லாம் தாயை முன்னிட்டுத் "தாய்தகப்பன்", "மாதா பிதா", "அன்னை தந்தை" எனவும் புகழ்ந்து கூறின. தாய் பிதாவை அறிவிப்பது மாத்திரமல்லாமல் இலவுகிக வழக்கத்துக்கு வேண்டிய வார்த்தைகளெல்லாம் அவளாலேயே போதிக்கப்படுகின்றன. அவளாலேயே குழந்தை பேசப் பழக்கப்படுகின்றது. இது இன்னபொருள் என்று அவளே பதார்த்த ஞானத்தை உண்டாக்குகிறாள். சர்வ சக்தியுள்ள ஒரு பரம்பொருள் உண்டென்பதைத் தாயே விளையாட்டாகவே தெரிவிக்கிறாள். பாபம் புண்ணியம் என்கிற நல்வினை தீவினைப் பாகுபாடுகளையும் வாசித்துத் தெரிவிக்கின்றாள். பாபத்தைச் செய்தால் தெய்வம் கோபிக்குமென்றும், புண்ணியத்தைச் செய்தால் அனுக்கிரகிக்குமென்றுங் கூறித் தெய்வமகிமையையும் விளக்கிக்காட்டுகின்றாள். தீட்டுமடியென்று சுத்தாசுத்தங்களையும் தெரிவிக்கின்றாள். இகபரம் இரண்டுக்கும் வேண்டிய விஷயங்களெல்லாம் சிறு வயதிலேயே தாயால் போதிக்கப்படுகின்றன சரீரபோஷணைக்கு வேண்டிய உணவுகொள்வதையும் தாயே தெரிவிக்கின்றாள்.

தர்மார்த்தங்களுக்குரிய அறிவும் பரலோக தெய்வமுண்டென்கிற ஆஸ்

திகஞானமும் தாயினுல் போதிக்கப்படுகின்றன. இவையெல்லாம் கல்வியறிவு உண்டாவதற்கு முன்னுலேயே தாயினுல் உபதேசிக்கப்படுகின்றன. கல்வி பயிலத் தொடங்கும் ஒரு புத்திரனுக்கு எல்லா அறிவுமுண்டு. தாயினுலே போதிக்கப்பட்ட அறிவையே பிதா கல்வி அறிவால் பிரகாசிப்பிக்கின்ருனே அன்றிப் புதிதாய் ஒன்றையும் அவன் போதிப்பதில்லை. இதனுல் தாயே பரம குருவாகிருளென்பது புலப்படும். இந்தச் சிறந்த காரணத்தை உத்தேசித்தே தாய் குருவர்ககத்தில் சேர்த்துப் படிக்கப்பட்டாள். சிறிய தாயார் பெரிய தாயார் அக்காள் முதலிய பெண்கள் குருவைப்போல மரியாதை செய்வதற் குரியவர்களேயன்றி உண்மையில் குரு ஆவதில்லை. தமையனும் பிதாவைப் போலக் கல்வியறிவை விருத்தியாக்கும் அதிகாரமுடையவனுதலால் அவனும் குருவர்க்கத்தில் சேர்க்கப்பட்டான். ஊகித்துப்பார்த்தால் ஒரு குழந்தை பிறந்து கல்விபயிலத் தொடங்கும்வரையில் அக்குழந்தை அடைந்திருக்கும் ஞானமெல்லாம் தாயால் பெற்றதேயென்று நன்கு விளங்கும். அந்த அறிவே விருத்தியாய் அறநூல், பொருள்நூல், இன்பநூல், வீட்டுநூல் எல்லாவற்றை யும் உணர்வதற்கும், வீடடைவதற்கும் காரணமாகும். ஆதலால் தாயே எல் லாக் குருவையும்விட மேலானவள். அதனுலே ஸ்மிருதிகள் தானப்பிரகா ணத்தில் பிதா குரு முதலியவருக்குக் கொடுக்கும் தானத்துக்கு ஒரு எல்லை வகுத்துத, தாய்க்குக் கொடுக்குந் தானத்துக்கு எல்லை கூருமல் அநந்த பலன் என்றும் அக்ஷய பலன் என்றும் கூறின. ஒரு புத்திரன் சந்நியாசம் பெறு கிருன். அவனைப் பிதா வணங்கவேண்டும். சந்நியாசியோ தாயைக் கண்ட வுடனே எழுந்திருந்து தாய்க்கு வணங்கிப் பூசித்து மரியாதை செய்யவேண்டு மென்றும் நூல்கள் கூறுகின்றன.

இதனுல் தாய் எவ்வளவு சிறந்தவளென்பதை ஊகித்தறிந்துகொள்ளலாம். கல்வியறிவினுல் இயற்கைஞானத்தைப் பிரகாசிப்பித்து உண்மை ஞானத்தை விளக்கிய பிதா குரு என்பதை ஆக்ஷேபிப்பார் இல்லை. இதனுல் ஒருவனுக் குத் தாயுந் தகப்பனுமே குருவும் தெய்வமுமாகிருர்களென்று கூறும் நூல்க ளின் அபிப்பிராயம் ஆக்ஷேபனையின்றிப் புகழ்ந்துகொள்ளத் தக்கதேயாம்.

"குரு" கு=அஞ்ஞான இருள்; ரு=அதை அழித்தல். இதனுல் குரு என்பதற்கு அஞ்ஞானததைப் போக்கடிப்பவர் என்பது பொருள். மெய்ஞ் ஞானத்தை விளக்குகிறவர் என்று கொள்ளப்படும். மெய்ஞ்ஞானமாவது பரம்பொருளைக் கண்டு அதை அடைவதற்குரிய கருவி. பரம்பொருளை அடைவதற்குரிய மெய்ஞ்ஞானத்தைப் பெறுதல், தாய் தன் குழந்தைகளுக்கு இளவயது முதற் போதித்துவந்த அறிவினுலேயே. அதை விளக்கிக்காட்டக் கல்வியைப் போதிக்கின்ற பிதாவை விட மாதாவே யிது விஷயத்தில் சிறந்த வள் சிறந்தவள் என்றதனுற் பிதா தாழ்ந்தவரென்பதல்ல. இருவருமே பூஜிக கத்தக்கவர்கள். மாதா பிதாக்கள் கல்வியுடையவர்களாயினும் இல்லாதவர்க ளாயினும் குருவேயாவார்கள். ஏனெனில் கல்வியாற் பெறப்படும் அறிவைத் தாய் முதலிலிருந்தும், அதன்பின் தகப்பனும் விளக்கிவிடுகிருர்கள் ஆகை

யால் என்க. இதுபற்றியே "தாய்சொற்றுறந்தால் வாசகமில்லை" "தந்தை சொன்மிக்க மந்திரமில்லை" என்ற நீதிவாக்கியங்க ளெழுந்தனவென்க. "எழுத்தறிவித்தவ னிறைவனாகும்" என்று பிறரும் கூறிக் குருவைத் தெய்வமென்றே நிரூபித்தார்கள்.

சிருஷ்டிகாலத்தில் நான்கு வருணத்தாராகிய பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திரர்களைப் பிரமன் சிருஷ்டித்தார். பிராமணர்களிடத்தில் அறிவுநூலாகிய வேதங்களை அங்கங்களுடன் கொடுத்தார். தண்டநீதி சாஸ்திரத்தை க்ஷத்திரியர்களிடத்தில் கொடுத்துப் பிரஜைகளை நீதியாய்ப் பரிபாலிக்க நியமித்தார். இராஜர்களைத் தெய்வமென்றே கூறுவார்கள். தெய்வமே குருவாதலால் அரசனும் குருவேயாவான். தண்டத்தினால் துஷ்டர்களைச் சிக்ஷித்து நல்வழிப்படுத்துகிறான். நீதிசாஸ்திரமாகிய சட்டத்தினால் இது நன்மையென்றும் இது தீமையென்றும் விளக்கிக் காட்டுகிறான். விதி விலக்குகளை நியமிக்கின்றான். விதிவழி தவறாமல் நடப்பவரை அனுக்கிரகிக்கின்றான். தவறினவர்களைத் தாக்ஷண்யமில்லாமல் தண்டிக்கிறான். பாடசாலைகளாலும் வித்வசங்கத்தாலும் பிரஜைகளுக்குக் கல்வி அறிவைப் புகட்டுகிறான். கருப்பு (பஞ்சம்)முதலிய துர்ப்பிக்ஷகாலங்களில் அந்நியநாட்டிலிருந்து தானிய தவசங்களை வரவழைத்துத் தன் குடிகளைப் போஷிக்கிறான். தண்டநீதியால் மங்கையர் கற்பு நெறி கடவாதிருக்கச் செய்து சற்சந்தான அபிவிருத்திசெய்து தன்னாட்டில் நல்ல பிரஜைகள் நிறைந்திருக்கச் செய்கிறான். தேவாலயங்களுக்கு உற்சவாதிகளைச் செய்வித்துத் தன் பிரஜைகளுக்குத் தெய்வபக்தியை விளக்குகிறான். சம்பாதித்துப் புசிக்கச் சக்தியில்லாத சப்பாணி, முடவர், குருடர், நொண்டி முதலானவர்களுக்கு அன்னசாலைகளை ஏற்படுத்தியும், அவர்களைத் தன் சொந்தக் கிருகத்தில் வைத்துக்கொண்டும் போஷித்துக் காப்பாற்றுகிறான். இதனைப் பாரதம், இராமாயணம் முதலிய நூல்களைப் படித்தவர்கள் அறிந்திருப்பார்கள். இவ்வாறு பல படியாலும் உபசரித்துப் பிரஜாபாலனம் செய்கிற அரசனும் குருவேயாவான் என்று கூறிய நூல்களின் கொள்கை எல்லாராலும் அங்கீகரிக்கப்படத்தக்கதேயாம்.

மெய்ஞ்ஞானத்தை விளக்கிப் பரம்பொருளைத் தரிசிப்பிக்கும் ஞானகுரு, மற்ற குருமார்கள் எல்லாரையும் போன்றவனல்லன். தன் நிஷ்டையினால் பரம்பொருளை, தான் பிரத்தியட்சமாய்க் கண்டு அதனுடன் ஏகமாய்க் கலந்திருப்பவனாதலால் அவன் பரம்பொருளேயாவான். மலமுள்ளவரைக்கும் பிரமத்தைக் காணமுடியாது. மலமற்ற அனந்தரமே பரம்பொருள் வெளிப்படும். தன் நிஷ்டையால் பரம்பொருளைக் கண்டவன் நிர்மலனாவான். ஆதலால் "பாசபத்த ஸத்தாஜீவ: பாச முக்தஸத்தா சிவ:" என்ற உபநிஷத் வாக்கிய பிரமாணத்தால் மலமற்ற ஞானகுருவும் பதிப்பொருளேயாம். ஆதலால் அவன் மகிமை அளவிடற்கரிதேயாம். இவ்வாறு குருவின் தன்மையை அறிந்து அவனை வழிபடுகிறவன் நிச்சயமாகவே மீளாக்கதியாகிய சாயுஜ்ய பதவியை அடைவான். இந்தக் குருபக்தி, மாதா பிதாக்களை அலட்சியம் செய்யாமல் அவர்களை வழிபடுவதனால் எளிதிற் கிடைக்கும். மாதாபிதாக்களை அலட்சி

யம் செய்கிறவனுக்குச் சற்குரு கிடைப்பதருமையேயாகும். இப்படித் தாய் தந்தை குரு தெய்வமென்கிற நாற்பொருளையும் ஏகமாய்க் கருதி மனோவாக் காயங்களால் வழிபடும் சற்புருஷன் பரம்பொருளையே யடைவான் என்பதிற் சந்தேகமில்லை.

குரு முற்றிற்று.

**சிவானந்தசாகர யோகீஸ்வரர்.**

---

# ஆசாரப்பகுதி.

## காலை விழிப்பின் அருங்குணம்.

இறைவனது திருவருட்படைப்புக்குட்பட்ட உயிர்களில் ஓய் வெடுத்துக் கொண்டு உறங்கும் இயல்புடையது மானிடவர்க்க மொன்றே யென்பது பிராணி சாத்திர வல்லார் கூற்று. பறவைகளும், விலங்கு முதலியனவும் இரவுகளில் வெளித் தோற்றத்திற்கு உறங்குவன போற் காணப்பட்டாலும் அவை ஓய் வெடுத்துக் கொண்டு அமைதியாக இருப்பதேயன்றி, உறங்குவ தில்லை. எங்ஙனமெனின், எந்த நிமிஷத்திலும், அவற்றிற்கு ஸ்பர்ச உணர்ச்சி மாறாதிருப்பதாலென்க. ஆகவே, மனித வர்க்கத்திற்கு விசேஷமாக அமைந்த உறக்கத்தை, ஓரளவுக்குட்படுத்தி வாழ்வதின்றி, அதிக நேரம் உறங்குவது ஆரோக்கிய மார்க்கத்திற்குக் கேடு விளைப்பதாகும். ஆகலின், நன்னெறி கடைப்பிடித்து, நன்மையடைந்து, தீ நெறி தெரிந்து விலகிய நமது முன் னோர்கள், நித்திரைக்குச் செல்வதற்கும், அதினின்றும் விழித்தற்கும் ஓர் காலவரையறை கோலிச் சென்றுள்ளனர். தமிழகத்தின் தனிப்பெரும் ஞானத்தாயாம் ஔவைப் பிராட்டியும் "சேமம்புகினும் சாமத் துறங்கு"— என நித்திரை செல்லும் நேரத்தை விதித்து "வைகறைத் துயிலெழு"—என உறக்கம் விட்டு எழும் காலத்தையும் விதித்தனரன்றோ!

இயற்கையமைப்பில், வருணிக்கவொண்ணா ஆனந்த வாழ்வு நடாத்தும் பறவைகளில், முதன் முதல் இரட்டைவால் பறவை என்னும் கரிக் குருவியே, தனது கத்துதலால், வைகறை நேரத்தைத் தெரிவிக்கின்றது; அதன் பின், சேவல் முதலியன கூவலால், விடியற்காலை விளங்கப் பெறும். தற்கால நவீன நாகரீகப் பேய் நணுகாத கிராமங்கள் பலவற்றிலே, இற்றைக்கும் வேளாளர் பலர், தத்தமது வேளாண்மைத் தொழிலின் பொருட்டு, அதி காலையிலேயே வீட்டைவிட்டு வெளிக் கிளம்பிச் செல்லுதல் சர்வ சாதாரண காட்சியாம்; அதனால் அவருட் பலர் 'நோயற்ற' ஆரோக்கிய வாழ்வு நடாத்து தல் கண் கூடு. மற்றும், கசடறக் கற்று, கற்றவாறு நின்றொழுகி, கல்வியிற் சிறந்து விளங்கிய முன்னோர்கள் காலத்திலே, இளஞ் சிறுவர்களாய் மாண வர்கள் பழைய பாடங்களைப் பாராயணம் செய்வதற்கும், புதியவற்றை மன

னம் செய்வதற்கும் 'வைகறை' வேளையையே தேர்ந்தெடுத்துப் பெரும் பயன்பெறுவாராயினர். அந்தோ! இக்காலத்து "நாகரிக' மாணவர்களின் நிலை என்னே! இவர்கள் பேயு முறங்கும் நடு நிசியில் வாசிப்பதும்; பின் நித்திரை போய், விடிந்து மூன்று, நான்கு நாழிகைகளாகியும் உணர்ச்சியின்றி உறங்கிக் கிடப்பதும்; பின், விழித்து, பல்லும் துலக்காது, படுக்கையிலிருந்தவாறே சூடான பான மொன்று (Bed Coffee) அருந்துவதும், நவீன நாகரிக வாழ் வின் கௌரவ வழக்கங்கள். ஐயகோ! என்னே இவர்தம் பேதைமை! கல் விக்கு அதிபதியாம் கலைமகளும், வைகறை வேளையிலே, உத்ஸாகத்தோடு வீணை வாசித்து ஆனந்த மயமாக இலங்கும் காலத்திலே—தன்னைப் போற்றி, கல்வியைக் கற்கும் மாணவர்க்குப் பொருள் புரிவாள் என்பது நமது சாத்திர போதனையன்றோ? நிற்க,

'வைகறை' என்பது மூன்றாவது ஜாமத்தின் முடிவும், நான்காவது ஜாமத்தின் தோற்றமும் ஆகும். அதாவது கடிகாரக் கணக்கின்படி, காலை மூன்று மணியாகும். இவ்வேளையில், கழிந்த இரவெலாம் போதிய ஓய்வு பெற்ற மூளையும், இருதயமும், இரத்தநாளங்களும் அசதி நீங்கப்பெற்று, எத்தகைய களங்கமு மின்றி மிகவும் தெளிவாக விருக்கும். வாத, பித்த, சிலேத்மமெனும் மூன்றுநாடிகளும், தத்தம் நிறைப்படி, மாத்திரையின் நடை மாறா நிற்கும் நேரமு மிதுவே. "மிகினும் குறையினும் நோய் செய்யும் நூலோர்—வளி முதலா வெண்ணிய மூன்று"—என்பது வள்ளுவர் பொன் மொழி. நமது உடலிலுள்ள நரம்புகளனைத்தும், அதிக உழைப்பும், மிக்க அசதியுமின்றி, தக்க வேளைகளில் ஓய்வு பெறின், எத்தகைய பிணிகள் நேரு வதற்கும் இடமிராது. அறிவிற்குத் தெளிவைத்தரும் தூய நரம்பின் துவாரத் தில் தங்கியிருக்கும் நீரானது, கலக்கமின்றித் தூய்மையாக விருக்கும் நேர மும், வைகறை வேளையேயாம். இக்காலை விழிப்பின் நறுங் குணங்களனைத் தையும், தேரைய மா முனிவர் ஒரு பாவில் திரட்டித் தருதல் காண்க:—

"புத்தி யதற்குப் பொருந்து தெளிவளிக்கும்
சுத்த நரம்பினற் றூய்மையுறும்—பித்தொழியும்
தாலவழி வாத பித்தம் தந்தம்நிலை மன்னுமதி
காலைவிழிப் பின்குணத்தைக் காண்."

மற்றும், சூரியோதய காலத்தில் தூங்குவோர் பாபமடைவார்கள் என் பது தரும சாத்திரத்துணிபு. அவ்வேளையில் உறங்கி, மற்ற எத்தகைய சௌகர்யங்களோடு வாழ்வை நடாத்தினும், பெரும்பாலும் அத்தகையோர் பிணிக்கு ஆளாகா தொழிதல் அரிதே. இது குறித்தே, நமது முன்னோரும் "வைகறையில் துயில் கொள்ளும் அறிவீனர்க்கும்"—என மருந்து கொடுத் தும் பலிதமாகாத மாந்தர் கூட்டத்தில், காலையில் துயில்வோரையும் சேர்த் துச் சொல்லினர். இங்கிலாந்து முதலிய மேனடுகளில் வாழ்வோர் காலை சுமார் எட்டு மணிவரை உறங்கியும் அறிவு குன்றப் பெறுகின்றார்களில்லையே என்று சிலர் ஐயுறலாம். அந்நாட்டு நிலை வேறு; இந்நாட்டு நிலை வேறு.

பனிக்கட்டி மூடி, பகலவன் ஒளியை மறைக்கும் குளிர்ப் பிரதேசத்திற்கும், காலை ஆறு மணி முதல், மாலை வரை வெங்கதிரோனால் வெதும்பிப் புழுங்கும் வெப்ப நாட்டிற்கும், எத்துணை வேற்றுமை யுண்டு என்பது அறிஞராற் சிந்தித்துணரற் பாலது. அவ்வந்நாட்டுத் தட்பவெப்ப நிலைக்கேற்ப, அவ்வந் நாட்டு ஆசாரம், ஆகாரம், தொழில் முதலியன அமைதல் இயல்பு. ஆகலான் சமசீதோஷ்ண நிலை வாய்ந்த நமது பாரத மணித்திரு நாட்டினர்க்கு, காலை விழிப்பே எவ்வாற்றானும் சிறந்ததென்பது தெளியக் கிடக்கின்றதன்றோ? அந்நாடுகளிலும் கூட, நெபோலியன் முதலிய யுத்த வீரர்கள், 'வைகறை' வேளைகளில் தமது போர்த் திட்டங்களைச் செப்பஞ் செய்து, வெற்றி பெற்றனரென்பது, சரித்திரம் வல்லுநரால் தெளியக் கிடப்பதொன்றாம்.

பட்டின வாசிகளெனச் செருக்கித் திரியும் செல்வர்களே! 'நகர' வாழ்வெனும், நரக வாழ்வு நடாத்தும் நாகரிகர்களே! பலப் பல அலுவல் களால் குழப்பப்பெற்ற மதி படைத்த மனிதர்களே! நுமது வருவாயில் பெரும் பகுதியை, அடிக்கடி 'டாக்டர்' கட்கு வாரி யிறைத்தும், வருத்தம் நீங்காது, பலமுறைகளிலும் பிணிகளாற் பீடிக்கப்பட்டு, துன்பமடைவது எதனால் என்று எண்ணுகிறீர்கள்? நடுநிசிக்குப் பின் நித்திரைக்குச் சென்று, காலை ஏழு அல்லது எட்டு மணி வரை உணர்ச்சியின்றி உறங்கிக் கிடப்பதனா லன்றோ? பாழும் காலை உறக்கத்தால், நாளுக்கு நாள் புதுப்புது நோய்கள் பல புறப்படுகின்றன; நோய்கள் பெருகவே, வைத்தியர்களும், வைத்திய சாலைகளும் வரம்பின்றிப் பெருகி வருதல் கண்கூடு. பாவம்! சொற்ப வருவா யுள்ள ஏழைத் தொழிலாளர், ஊழியர்கள் முதலியவர்கள் அரும்பாடுபட்டுச் சேர்க்கும் பொருளைச் செலவழித்தும் தமது துன்பம் நீங்கப் பெறுகின்றார்க ளில்லை! (நகரங்களிலும், அத்தி பூத்தாற்போல அங்கொருவரும், இங்கொரு வருமாக, 'வைகறைத் துயிலெழுவார்' ஒரு சிலர் இல்லாது போகார். ஆயினும், அவர் தொகை 'கடலிலிட்ட காய' த் தோடொக்கு மன்றோ? எல்லா நகரவாசிகளும், 'வைகறைத் துயிலெழும் சீலத்தை மேற் கொண் டொழுகினாலன்றி, துயர்க்கடல் கடத்தல் அரிதென்பது, வெள்ளிடைமலை.) நிற்க,

மனித வருடம் ஒன்று, தேவர்க்கு ஒரு நாளாகும். அக்கணக்கின்படி, மாதங்களிற் சிறந்த மார்கழி மாதம், தேவர்களுக்கு விடிய ஐந்து நாழிகை (காலை 4 மணி முதல் 6 வரை) நேரம் ஆகும். ஆகலின், தேவர்க்கு வைகறை வேளையாகிய மார்கழி மாதம், தேவாராதனைக்கும், அரிஅரர்களை வழிபட்டு நோன்புபுரிவதற்கும், மிகச் சிறந்ததாகலின் ஸ்ரீகீதாசார்யனை கிருஷ்ணபா மாத்மாவும்,

'மாஸாணும் மார்க்க சீர் ஷோஹம்'—

என அருளிச் சென்றார். மாதங்கள் மற்ற பதினொன்றுங் கிடக்க, இனைத மட்டில் சிறந்ததாக எடுத்துக் கொண்டமையால், 'வைகறை வேளை' யின் சிறப்பு செவ்விதில் விளங்கும். இது கண்டன்றோ, தேனொழுகும்

திருவாசக ஆசிரியர், மாணிக்கவாசகரும், சூடிக் கொடுத்த சுடர்க் கொடியாம் ஆண்டாளும் இறைவனைக் குறித்து நோன் பிழைத்தற்கு, ஏற்ற காலமாக 'வைகறை' வேளையையே சிறப்பித்துப் பாடிச் சென்றனர். மேலும், யோக அப்பியாசத்திற்கு, மூளையும், லௌகிக உலகும், கலக்கமின்றி அமைதியாக நிலவும் வைகறை வேளையே, ஏற்ற வேளையாகும்—மேலும், காலை விழிப்பி னால் சரீர ஆரோக்கியமும், சுறுசுறுப்பும், மன அமைதியும், அறிவு விளக்கமும் ஏற்படுதலை ஒவ்வொருவரும் இன்றும் கண்கூடாகக் காணலாம்; மற்றும், அவ்வேளையில் ஆண்டவனை நோக்கி வேண்டுவதும், பெரியோர் அனுபவத் தில் காட்டியருளிய சிறந்த சாதனமும், இறைவனது திருவருளை எளிதில் பெறுவிப்பனவாம்.

இறுதியாக, இதுகாறும் கூறியவாற்றால், முற்கால மாணவர்கள் வைகறை வேளையில் பாடங்களைப் பயின்று, பெரும் பயன் பெற்றனர் என் பதும், அவ்வேளையில், நரம்பு முதலியன தூய்மை யெய்தி, அறிவு விளக்க மாகி, அங்கங்கள் சுறுசுறுப்படையும் என்பதும், சூரியோதயகாலத்தில் உறங்குவது, பாவத்தையும், நோயையும் விளைவிக்கும் என்பதும், அவ்வந் நாட்டுப் பழக்க வழக்கங்கள், அவ்வந்நாட்டுத் தட்பவெப்ப நிலைக்கேற்ப அமைந்திருப்பதால், மேனாட்டார் வழக்கம், இந்நாட்டார்க்குப் பொருத்த மான தன்றென்பதும், ஆண்டவனை நோக்கி வேண்டுவதற்கு, சிறந்ததும், ஏற்றதுமான வேளை 'வைகறையே' என்பதும் ஒருவாறு விளக்கப்பட்டன. ஆகலின், இனியேனும், ஆரம்ப அசௌகர்யங்களைப் பொருட்படுத்தாது, அனைவரும், காலை விழிப்பைக் கடைப் பிடித்தொழுகி, நற்பயனடைவார் களாக.

**வ. கிருஷ்ணஸ்வாமி**, மஞ்சகுப்பம், **C.N.T.**

---

## தலைகீழ் வியாபாரம்.

(தொகுதி 11, 492-ம் பக்கத் தொடர்ச்சி.)

அடடா! இன்னொரு ஆச்சர்யம் பார்த்தீர்களா! கலியாண காலத்தில் கூடியவர்க்கு முதல் பூஜைப்பொருள்கள் ஆங்கில முறைப்படி அமைந்த காபி யும், அதற்குப் பொருத்தமான இட்டிலி, தோசை, நெய், உப்புமாவுமே. இந்தப்பூஜை காலை 6-மணிக்குச் சரியாக ஆகவேண்டும். ஸ்நானம், சந்தியா வந்தனம் என்று அவர்கள் கோஷ்டியில் யாராவது தெரியாமல் சொல்லிவிட் டால் அவர்களின் கன்னத்தில் பலகாரம் சுடச்சுட விழுந்துவிடும். இந்தக் காலை பூஜை டயம் பிசகினால் அவர்களுக்கு ஸ்பிரிட் ஏறிவிடும். பிள்ளை வீட் டுக்காரர்களின் கண்கள் கோவைப்பழத்தைப் பழிக்கக்கூடியனவாய்ச் சிவந்து விடும். அவர்களுக்குச் சாப்பாடு ஆகும்வரை தாகசாந்திக்குச் சோடாவும், ஐசுமே. போஜனத்துக்குப் பின் டிபன் டீயும், கோக்கோவுமாகும். இராப் போஜனத்துக்குப் பிறகு பால் சப்ளை. இவ்வளவும் பெண்வீட்டார் பயத் துடன் டயம் தப்பாமல் கொடுத்துவந்தாலும் அப் பெண்வீட்டார்க்குக்

கெட்டபேர் வந்துவிடும். தங்கள் சொந்த வீடுகளில் பழய சாதமுண்டும், சில சமயம் அதுவுங்கூட இல்லாமலும் இருந்து அரைகுறைப் போஜனம் இரண்டு வேளையு முண்ணும் வழக்கமுடையவர்களும், காபி, டீ, கோகோ இவைகளைத் தங்கள் ஜன்மத்தில் கண்ணாலும் பார்க்காதவர்களுங்கூட காபி பலகாரம்வரக் கொஞ்சம் தாமதமானபோது பெண்வீட்டார் மீது கோபங்கொண்டு "ஓல்ட் டெவில்ஸ், என்னையா காபிக்கு இவ்வளவு லேட் ? பிச்சைக்காரன் வீட்டில் கலியாணம் செய்தால் இப்படித்தான்" என்று அதிகாரத் தொனியோடு சமயல்காரனிடம் வெகு முறுக்காகப் பேசுவார்கள். இவர்கள் ஆங்கிலம் வாசித்திராவிட்டாலும் ஆங்கிலம்தான் அதிகார தோரணைக்கு அடுத்தது என்று எண்ணித் தங்களுக்கு பரிச்சியமான இரண்டொரு ஆங்கில வார்த்தையை மிசிரம்செய்து பேசுவார்கள். "நாம் இப்போது இகழ்ந்து கூறும் பிச்சைக்காரனிடத்தில் ஆயிரக்கணக்காய்ப் பணம் பறித்தோமே ; இது சரிதானா" என்றாவது, தங்கள் ஸ்திதி என்ன என்றாவது யோசிக்காமல் தங்களிடத்தில் பிரபுத்வம் இருப்பதாகவும், பெண் கொடுத்தவனை நாயினுங் கடையனை ஒருவனைப்போலவும், தாங்கள் இந்திரபதவியிலிருப்பவர் போலவும் நினைக்கத் தலைப்பட்டு விடுவார்கள். இப்படிப் பெண்வீட்டார் அதிகச் செலவுசெய்து பூர்வீக சொத்து பூராவும் விரயமாக விவாஹ சடங்கை நடத்தினாலும் பிள்ளை வீட்டுக்காரர்கள் எதாவது ஒரு குற்றத்தை விவாஹ காலத்திலாவது, பின்னிட்டாவது பெண் வீட்டுக்காரர் மீது ஏற்படுத்திக்கொண்டு அவர்களிடம் ருதுசாந்திக்கு ரூபாய் 500, 1000 கொடுத்தால் தான் அது ஆகும் என்று கட்டாயப்படுத்தி வாங்கி ருதுசாந்தியையும் செய்கிறார்கள். இன்னும் அவர்கள் கலியாணச் சடங்கில், உள்நாட்டு கதர் முதலிய ஜவுளிகளைப் பெண்வீட்டார் சரச விலையில் வாங்க இசைவதில்லை. உயர்ந்தவைகளையே விரும்புகிறார்கள். அதனால் ஜவுளியே ரூபாய் 1000, 1500, இழுத்து விடுகிறது. சலீசாக கதர் ஆடைகளை உபயோகித்தால் அநாகரீகம் என்கிற பேய் பிடித்துவிடும் என்று நினைக்கிறார்கள். முன்காலத்தில் மாப்பிள்ளைக்கு நாட்டு நெசவு 12 + 6 சோமன், நாகவல்லி துப்பட்டா, கலியாண ஜோடு, இவை போன்றவைகள்தாம் ஏற்பட்டிருந்தன. இக்காலத்திலோ 100-ம் நெம்பருக்குக் கீழ்ப்பட்டதல்லாத சோமன், பட்டு லேஞ்சு, பனியன், ஷர்ட், வெஸ்ட்கோட், கோட், டை, காலர், பூட்ஸ், ஸ்டாக்கிங்ஸ், உயர்ந்த பட்டுக் குடை, வெல்வெட் குல்லா, உயர்ந்த பட்டு ஹாண்ட்கர்சீப், செண்ட் பாட்டில், சோப்பு தினுசுகள் ஆகியவற்றை மாப்பிள்ளைமார் அணிய விரும்புகிறார்கள். இவைகளை அணிந்துகொண்டும், பத்தினிகளை வீட்டுவேலை செய்யவிடாமல் ஆர்மோனியம் வாசிக்கச்செய்தும், அவருடன் மோட்டார் சவாரிசெய்து ஜோடியாய் பீச்சுக்குப்போய் ஆங்கிலத்தில் சம்பாஷணை செய்துகொண்டு திரிந்து, வீட்டு வேலைக்காரர், சமையல்காரர் முதலிய ஏவலாளிகளை வைத்துக் கொண்டு கிருஹகிருத்யம் நடத்தி, தற்கால நாகரீக சமுத்திரத்தில் மூழ்கி, வரவுக்கு மீறின செலவுசெய்து கடன்காரராகி, கடைசியில் நிரம்பவும் சங்கடத்

துக்குள்ளாகி வருந்துகிறார்கள். இப்பழக்கங்களால் இருதிறத்தார் குடும்பங்களும் கேட்டையடைகின்றன. அனேக பிராம்மணர் குடும்பங்கள் இக்கோலத்தை அடைந்திருக்கின்றன.

பெண்ஜாதி ஆர்மோனியம், பிட்டில் வாசிப்பதையும் உல்லாசமாயிருப்பதையுமே தற்கால நாகரீகத்தை விரும்புவோர் கவனிக்கிறார்களே தவிர,

"நன்றி யறிதல் பொறையுடைமை இன்சொல்லோ
டின்னாத எவ்வுயிர்க்கும் செய்யாமை கல்வியோ
டொப்புர வாற்ற அறிதல் அறிவுடைமை
நல்லினத் தாரோடு நட்டல் இவையெட்டும்
சொல்லிய ஆசார வித்து"

என்கிற ஆன்றோர் வாக்கியத்தை ஒரு சிறிதும் உணர்ந்தார்களில்லை. இந்த அரும்பெரும் வாக்கியத்தை மேற்கூறிய ஜெண்டில்மேன்களுக்கு ஒரு புண்யவான் உபதேசிக்க முயன்றால் அவர்கள் "போமய்யா போம். என்னையா நீர் பட்டிக்காட்டு 305-ம் பசலி ஆசாமிபோலிருக்கிறீரே; உமக்கு என்ன தெரியும்; நாமெல்லாம் மாடர்ன் வியூவை அனுசரிக்க வேண்டுமையா; நீர் சும்மா தாளிக்கிறீரே; உம்முடைய பழங்கதை போல் எத்தனையோ நான் பார்த்திருக்கிறேன். நீர் அவ்வளவோடு நிறுத்தும்; எல்லாம் யூஸ்லெஸ்; மனசுதான் எல்லாவற்றிற்கும் காரணம்" என்று சொல்லி அவருடைய வாயை அடக்கிவிடுவார்கள். "சிந்தையை யடக்கியே சும்மாவிருக்கின்ற திறமரிது" என்கிற தாயுமானவர் வாக்கியத்தை அலக்ஷியம் செய்துவிட்டு வாசாமாத்திரத்தில் "மனசு காரணம்" என்று சொல்லி முடிப்பார்கள். பகவத் பக்தியினாலும், ஆசாரத்தினாலும்தான் மனசு சரியாகவேண்டும் என்பதைச் சிந்திக்கமாட்டார்கள்.

நான் தூஷணையாக இதை எழுதியிருக்கிறேன் என்று நண்பர்களாகிய நீங்கள் நினைக்கக்கூடாது. மனிதர் ஒருவர்க்கொருவர் பரஸ்பரம் விசுவாசித்து அவர்க்குள் ஒற்றுமை ஏற்படவேண்டும் என்ற நோக்கம்கொண்டு இதனை வரைந்தேனே தவிர வேறில்லை. ஒற்றுமைதான் சந்தோஷம், க்ஷேமம், ஜெயம், கீர்த்தி, இலக்ஷ்மி கடாக்ஷம் முதலான சகல வைபவங்களையும் தரவல்லது. ஆதலின், ஒருவரையொருவர் சங்கடத்துக்குள்ளாக்கி முடிவில் எல்லோரும் கெடுதற்குரிய விகற்பபுத்தியை நீக்கி ஒற்றுமையைக் கைக்கொள்வோமாக; நம் பாரதமாதா தன் பூர்ண சக்தியுடன் வெளிப்படுவாளாக! நம்மவர்களுக்கு இருக்கும் குறைகளை நீக்கி சர்வ மங்களங்களையும் அனுக்கிரஹிப்பாளாக.

T.V நாராயணசுவாமி அய்யர், 2279 நெ. சந்தாதாரர்.

---

**சந்தாதாரர்களுக்கு.**—சந்தா நெம்பர் தெரியாதவர்கள் மாத மாதம் வரும் சஞ்சிகையின் மேலுள்ள விலாசத்தில் குறிக்கப்பட்டிருக்கும் சந்தா நம்பரைப் பார்த்துக் குறித்து வைத்துக்கொள்ளக் கோருகிறோம்.

## விவசாயப்பகுதி.

### இந்திய விவசாயத்தொழிலின் நிலைமை.

பண்டை நாட்களில் நம் தாய் நாடு கைத்தொழில்களிலும், விவசாயத்திலும், வாணிபத்திலும் சிறப்புற்றோங்கி யிருந்தது. நம் நாட்டில் வசித்து வந்தவர்களில் பெரும்பான்மையோர் நாட்டின் விவசாயத் தொழிலை அபிவிருத்தி செய்வதிலேயே தங்களது கவனத்தைப் பெரிதும் செலுத்திவந்தனர். அதன் பயனாக நம் நாட்டின் விவசாயம் நாளுக்கு நாள் அபிவிருத்தி யடைந்து வந்தது. உலகத்தில் தொன்று தொட்டே நம் இந்திய நாடு ஒரு விவசாய நாடாக விளங்கி வருகின்றது. விவசாயத்தொழில் அபிவிருத்தி யடைவதற்கு இன்றியமையாத பல சாதனங்கள் நம் நாட்டில் இயற்கையாக அமைந்திருப்பதைப்போல் உலகிலுள்ள மற்ற நாடுகளில் அமைந்திருப்பதாகத் தெரியவில்லை. நம் நாட்டின் சீதோஷ்ணஸ்திதியும் விவசாயத்தொழிலுக்கு அனுகூலமுள்ளதாகவே அமைந்திருக்கின்றது. இக் காரணங்களினாலேயே மற்ற தேசங்களைக் காட்டிலும் நம் நாடு தொன்றுதொட்டே விவசாயத் தொழிலில் தலை சிறந்து விளங்கிவருகின்றது. நம் நாட்டு மக்கள் அதைத் தங்களது முக்கியமான தொழிலாக அக்காலத்தில் நடத்திவந்தனர். அதன்பயனாகப் பண்டை நாட்களில் நம் முன்னோர்கள் பஞ்சம் என்பதையே அறியாமல் தங்களது வாழ்க்கையைச் சந்தோஷமாக நடத்திவந்தனர். பண்டை நாட்களில் நமது நாட்டை ஆண்டுவந்தவர்கள் எல்லோரும் நம் நாட்டின் விவசாயத் தொழிலுக்கு வேண்டிய ஆதரவை அளித்து அதை அபிவிருத்தி செய்வதற்குப் பெரிதும் துணைபுரிந்தார்களென்பது நம் நாட்டுச் சரித்திரங்களிலிருந்து நன்கு விளங்குகின்றது. நாட்டின் ஜீவாதாரமான அத்தொழிலின் பெருமையைப்பற்றிக் கூறவும் வேண்டுமோ? அத்தொழில் நம் முன்னோர்களின் சுயேச்சையான வாழ்க்கையை அறிவுறுத்தவில்லையா? அப்படிப்பட்ட சுயேச்சையுடன் கூடிய வாழ்க்கையை நடத்தியவர்களின் சந்ததியார் என் இதுபோழ்து மிகவும் கேவலமான நிலைமையிலிருந்து வருகின்றனர்? நம் நாட்டு விவசாயத்தொழில் நன்கு கவனிக்கப்பட்டால் அவர்களுக்கு இப்படிப்பட்ட நிலைமை ஒருகாலும் ஏற்படாது.

எல்லாத்தொழில்களிலும் விவசாயமே சிறந்தது. இதனாலேயே,

"மேழிச் செல்வம் கோழைபடாது" எனவும்,

"சீரைத் தேடின் ஏரைத்தேடு" எனவும்,

"தொழுதூண் சுவையின் உழுதூண் இனிது" எனவும்

நமது ஔவைப்பிராட்டியார் கூறி யிருக்கின்றார். தமிழ் வேதமென்று பலராலும் போற்றப்படும் **திருக்குறளை** இயற்றிய திருவள்ளுவனாரும் நம் நாட்டு விவசாயத் தொழிலின் சிறப்பையும் பெருமையையும் தமது நூலில்,

"உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாந்
தொழுதுண்டு பின்செல் பவர்."

"பலகுடை நீழலுந் தங்குடைக்கீழ்க் காண்பர்
அலகுடை நீழ லவர்."

என்னும் செய்யுட்களால் விளக்கியிருக்கின்றார்.

இத்தகைய பெருமை விவசாயத் தொழிலுக்கு நம் நாட்டில் இருப்பதை உணர்ந்து அதை அபிவிருத்தி செய்வதற்காக இப்போழ்து எத்தனைபேர் உழைத்து வருகின்றனர்! விவசாயத்தொழிலுக்கு இருக்கின்ற பெருமை நமது ஆன்றோர்களின் அரிய மொழிகளினால் நன்கு விளங்கவில்லையா? அத்தகைய பெருமை வாய்ந்த அத்தொழில் இதுபோழ்து நாட்டில் மிகவும் குறைவுபட்டு வருவதற்குக் காரணம் என்ன? நமது நாட்டிற்கு விவசாயத் தொழிலே ஜீவநாடிபோல் இருந்து வந்தும் அத்தொழிலின் பெருமையை அறியாமல் தற்காலம் நமது நாட்டினர், அத்தொழிலில் தங்களது கவனத்தைச் செலுத்தாமல் வேறு பல உபயோகமற்ற துறைகளில் செலுத்தித் தங்களது வாழ்க்கையை அறவே கெடுத்துக்கொண்டனர். நம் நாட்டு விவசாயத் தொழில் நம்மால் நன்கு கவனிக்கப்பட்டால் நாம் எத்தனையோ கோடி ஜனங்களுக்கு உணவுப்பொருள்களை அளிக்கலாம். பஞ்சம் என்பதையும் பசி யென்பதையும் அறியாமல் கற்பகம்போலிருந்த நம் நாடு இப்போழ்து பஞ்சத்திற்கும், பசிப்பிணிக்கும் இடமாகி யிருப்பதற்குக் காரணம் நம் நாட்டு விவசாயத்தொழில் க்ஷீணமடைந்ததே யன்றி வேறல்ல.

(தொடரும்) **உபகாரி.**

---

## சுயமொழிப்பகுதி

### தனித்தமிழும் ஆங்கிலமும்.

1. மேற்படி தலையங்கத்தின் கீழ், சென்ற தைமாத, சித்திரைமாத "ஆனந்த போதினி" வெளியீடுகளில், புதுவைத் தமிழாசிரியர் ஸ்ரீமான். மாணிக்க நாயகர் அவர்கள், தமிழராகிய நாம் நம் பாஷையை ஆங்கிலச் சொற்களின் கலப்பின்றிப் பேசவும் எழுதவும் வேண்டுமென மிகவும் வற்புறுத்திக் கூறி யுள்ளார். இதுபோல் இதற்கு முன்னரும் அனேகம் பெரியார் இவ்விஷயத்தை யிட்டுப் பத்திரிகைகளில் எழுதியும் பிரசங்கமேடைகளிற் பேசியுமுள்ளார்கள். ஆனால் இன்னோரின் எழுத்தையாவது பேச்சையாவது கவனிப்பார் மிகச் சிலரேயா யிருக்கின்றனர்.

2. தமிழைப் பேசும்போதாவது எழுதும்போதாவது ஆங்கிலச் சொற்களைக் கலப்பவர் தமிழ் ஓர் பூரணமற்ற பாஷையெனக் கருதியிருப்பவர் போலும். அன்னோ ஓரிடத்தில் தமிழ்ப்பதத்திற்குப் பதிலாக ஆங்கிலேய

பதத்தை யுபயோகித்தால் யாவரும் இலேசாய் அறிந்து கொள்ளுவார்களென்னும் நியாயத்தைக் கொண்டிருத்தல் கூடும். ஒன்றை எழுத அல்லது பேசப் புகும்போது சாதாரண வழக்கிலுள்ள ஓர் தமிழ்ப்பதம் கிடையாதபட்சத்தில் அவ்விதம் செய்வது குற்றமாகாது. உதாரணமாய் **Motor Car** என்பதை "மோட்டார் வண்டி" யெனச் சொல்வது பிழையாகாது. அவ்விதம் எழுதும்போதும் அவ் வாங்கிலேய பதங்களின் உச்சரிப்பைக் கவனித்தே எழுதவேண்டும். அதைவிட்டு **Automatic** என்பதற்கு "ஆடோமாடிக்" என்றும், **Ordinary** என்பதற்கு "ஆர்டினரி" என்றும் இன்னும் அநேகம் விளங்கமுடியாத விதமாயும் எழுதிவிட்டால் வாசிப்போர் என்ன செய்வர். இதுமட்டுமா, "கடிதம்" என்பதற்கு "லெட்டர்" என்றும், "கந்தோர்" அல்லது "காரியாலயம்" என்பதற்கு "ஆபீஸ்" என்றும் இன்னும் இப்பேர்ப்பட்ட இலேசான பதங்கட்குப் பதிலாயும் ஆங்கிலேய பதங்களை உபயோகிக்கிறார்களே இது அழகாமா?

3. சிலர் சம்பாஷணை முழுவதும் தமிழினுற் பேசி ஒருவரைச் சந்திக்கும் போது அல்லது விட்டுப் பிரியும்போது மாத்திரம் **Good-morning, Good-evening,** என்று சொல்லுகின்றனர். இது என்ன வேடிக்கை. வாடிக்கை போலும்.

4. சிலர் தமிழ்க்கடிதங்களின் முகவுரையில் "பட்சமுள்ள நண்பருக்கு" என்பதற்குப் பதிலாக **My dear friend** என்றும், சிலர் ஈற்றில் "தங்கள் உண்மையுள்ள" என்பதற்குப்பதிலாக **Yours truly** என்றும் இன்னும் சிலர் தங்கள் பெயரையே ஆங்கிலத்திலும் எழுதி விடுகிறார்கள்.

5. சிலர் இம்மட்டோடு நிற்கவில்லை. தங்கள் பெயரிலும் ஆங்கிலம் கலக்கவேண்டுமென்று விரும்புகிறார்கள். உதாரணமாய், சண்முகம் கோவிந்தன் என்பவர் ச. கோவிந்தன் என எழுதுவதைவிட்டு **S.** கோவிந்தன் அல்லது எஸ். கோவிந்தன் என்று எழுதி விடுகிறார்கள்.

6. சிலர் வேறுமதத்தவர்களாய் மாறுகிறார்கள். அவ்விதம் அவர்கள் சமயம் மாறியவுடனே ஓர் மாற்றுப் பெயரையும் பெறுகிறார்கள். அப்படிப் பெற்றவர்களிற் சிலர் தங்கள் இயற்கைப் பெயரை மறைத்துத் தங்கள் புதுப் பெயரையே வழங்குகிறார்கள். உதாரணமாய் சண்முகம் கோவிந்தன் என்பவர் கிறிஸ்தவராகி, ஜோன் என்னும் பெயரைப் பெறுகிறாரென வைத்துக் கொள்வோம். அவர் தம் பெயரை ச. ஜோ. கோவிந்தன் என எழுதாமல் ச. கோ. ஜோன் என எழுதிவிடுகிறார். இவருடைய பெயரைக்கண்டால் இவரை எச்சாதியாரென மதிப்பது? ஒரு சமயம் இவருடைய ச. கோ. என்பன எதைக் குறிக்கின்றன என்பதை ஆராய்ந்து இவரைத் தமிழரென அறிந்தாலும் இவர் தம் மகனுக்கு தோமாஸ் என்னும் பெயரை வைத்து விடுகிறார். அவர் ஜோன் தோமாஸ் என அல்லது தோமாஸ் ஜோன் என வழங்குகிறார். இவரின் தந்தையைக் கஷ்டப்பட்டுத் தமிழரென அறிந்தாலும் இவரை அறிய ஒருவழியுமில்லை.

7. தமிழ்ச்சகோதரரே! உங்கள் பாஷையில் உங்களுக்கு அபிமானமிருக்குமாயின் இத்தீயபழக்கத்தை அடியோடு விட்டுவிடுங்கள். தமிழோடு ஆங்கிலத்தையாவது ஆங்கிலத்தோடு தமிழையாவது கலவாதீர்கள். உங்கள் பாஷை தெய்வப்பாஷை என்பதை மறவாதீர்கள். உங்கள் பாஷையில் உங்களுக்குப் பெருமை யிருக்கட்டும். **ஓர் தமிழன்.**

---



## ஆத்திசூடி உதாரணக்கதைகள்.

(தொகுதி 11, 477-ம் பக்கத் தொடர்ச்சி.)

### "இலவம் பஞ்சிற்றுயில்."

"இலவம் பஞ்சில்—இலவம் பஞ்சினாலாகிய மெத்தையிலே, துயில்—நீ நித்திரை செய்" என்பது இதன் பொருள்.

இலவம் பஞ்சானது, மனிதர்க்குச் சரீர சௌக்கியத்தை யுண்டாக்கக் கூடியது. அதனால் மெத்தை செய்து மனிதர் அதன்மீது படுத்து நித்திரை செய்துவந்தால் தேகாரோக்கியமுடையவர்களா யிருப்பார்கள். இக்காரணத்தாலேயே பண்டைக்காலந்தொட்டு மனிதரால் இது படுக்கைக்கின்றியமையாததாகக் கொள்ளப்பட்டு வருகின்றது. ஆதலின், மனிதர் தங்களுக்குச் சக்தியிருக்குமானால் பெரும்பான்மையும் இலவம்பஞ்சு மெத்தையையே சயனத்துக்கு யோக்கியமாகக் கொள்ளவேண்டுமென்பது விளங்குமாறு இவ்வரிய நீதியை ஔவைப்பிராட்டியார் கூறினார். இதனை யுணர்ந்தவர்களுள், இலவம் பஞ்சு மெத்தை செய்துகொள்ளச் சௌகரியமுடையவர்கள் அதையே செய்து படுக்கைக்கு உபயோகித்து வருகின்றனர்; சக்தி யில்லாதவர்கள் அது போன்ற வேறு பலவற்றைச் செய்து உபயோகிக்கின்றார்கள். பெரியோர் உரையை அவமதிக்கும் விபரீத புத்தியுடைய சிலர்மட்டும் குறுக்கு வழிகளில் இறங்கிப் படுக்கைக்குத் தகாதவற்றை உபயோகித்து அவஸ்தைக்குள்ளாவதுண்டு. அத்தகையாருள் ஒருவர் கதையை இங்கு விளக்குவாம்:

ஒரு நகரத்தில் செல்வத்திற் சிறந்த ஒருவர் இருந்தார். இவர் தாமாக எதையும் சம்பாதிக்கவில்லை; இவரிடத்தில் பொருள்தேடும் ஆற்றலும் அறிவும் இல்லை; இவருக்கு எவ்வகைக் கல்வியிலும் பூரண ஞானமில்லை; சுயபாஷையில் கொஞ்சமும், அன்னிய பாஷையிற் கொஞ்சமும் தெரியும். எனினும் இவர் எவற்றிலும் தற்பெருமையுடையவர்; பெரியார் உரையை அவமதிப்பவர்; தம் மனம் போனவாறே நடப்பவர்; பிறர் சொல்லும் எதற்கும் மறுப்பே கூறும் வழக்கமுடையவர்; நாகரிக மயக்கத்தால் மனிதர்க்குப் பொருந்தாதவற்றை யெல்லாம் செய்யும் புத்தியுடையவர்.

இவர் ஒரு சமயத்தில் ஊர்ப்பிரயாணம் புறப்பட்டுப்போகும்போது ஒரு எருக்கங்காட்டினடுவிற் சென்றார். அப்போது எருக்கங்காய்கள் பழுத்துக் காய்ந்து வெடித்து அவற்றிலிருந்து விரையுடன் சேர்ந்த ஒருவிதமான பஞ்சு வெளிப்பட்டுக் காற்றில் பறந்துகொண்டிருந்தது. அதை அவர் கையிலெடுத்துப் பார்த்தார்; அஃது இலவம்பஞ்சைக்காட்டினும் மென்மையுடையதாயிருந்தது. அதைக் கண்டவுடன், அவர், தம்முடன் வந்த விவேகி யொருவரிடத்தில், "இதனால் மெத்தைசெய்தால் இலவம்பஞ்சு மெத்தையைக்காட்டினும் மிருதுவுள்ளதாயிருக்கும்" என்று சொன்னார். அதற்கந்த விவேகி, "அது உடம்பிற்குக் கெடுதி செய்யும்" என்று சொன்னார். தனவந்தர், பிறர் கூறும் புத்திகளை எடுத்துக்கொள்ளா இயல்பினையுடையவராதலின், அவர் வார்த்தையைத் தடுத்து, "ஓ! நான் உலக அனுபவ ஞானமுள்ளவன்; எனக்கெல்லாம் தெரியும்; மென்மையான வஸ்து எதுவாயிருந்தாலும் உடம்பிற்குக் கேடுசெய்யாது" என்று தற்பெருமை பேசி ஒரு வண்டி நிறைந்த எருக்கங் காய்களைச் சேகரித்துக்கொண்டுபோய் அவற்றிலிருந்த பஞ்சை யெடுத்து அதனால் மெத்தைசெய்து போட்டுப் படுத்துக்கொண்டார். அவர் மிகுந்த சுகவாசியாயிருந்தபடியால், எருக்கம்பஞ்சின் வெப்பம் அவருடைய உடம்பில் வியாபிக்கவே சில தினங்களில் கண்கள் பொங்கிவிட்டன; வாயும், நாவும், தொண்டையும் வெந்து இரணமாகிவிட்டன; வயிற்றிலும் அழலை அதிகரித்துச் சீதபேதி யுண்டாய்விட்டது.

அவர் சங்கடப்பட்டு "இதென்னடா இழவு! உடம்பு வேக்காடாகிவிட்டது!" என்று ஒரு வைத்தியரை அழைத்து அவரிடம் தம்முடைய வியாதியின் விருத்தாந்தத்தைக் கூறினார். அவர் அதற்குத் தக்கமருந்து கொடுத்தார். பிரபு தினந்தோறும் அந்த மெத்தையிலேயே படுத்துக்கொண்டிருந்தபடியால் அம் மருந்தினாலும் அவ்வெப்பம் தணியவில்லை. அதைக்கண்டு வைத்தியர், சந்தேகங்கொண்டு "தாங்கள் நூதன வழக்கமெதையேனும் கைக்கொண்டிருக்கிறீர்களோ?" என்று அவரிடம் கேட்டார். அதற்குப் பிரபு, "நான் கெட்ட வழக்கமொன்றுஞ் செய்யவில்லை; எருக்கம்பஞ்சு மெத்தையில் படுத்துக்கொண்டு வருகிறேன்" என்று சொன்னார். உடனே வைத்தியர், "ஐயோ! அது சாதாரண மனிதர்க்கு அதிக வெப்பத்தை உண்டுபண்ணக் கூடியது; ஆதலின் நீங்கள் அதனை நீக்கிவிட்டால் மாத்திரந்தான் உங்களுடைய உடற்சூடு தணியும்" என்றார். அதன்மேல் தனவந்தர், எருக்கம்பஞ்சு மெத்தையைத் தள்ளிவிட்டு இலவம்பஞ்சு மெத்தையில் படுத்தார்; வியாதி நீங்கிற்று.

(தொடரும்.)

**செம்பூர்-வீ. ஆறுமுகஞ் சேர்வை.**

---

## நல்லுரைத்திரட்டு.

(தொகுதி 11, 450-ம் பக்கத் தொடர்ச்சி.)

(45) வறியார்க்கீவதே ஈகை; மற்றவர்க்கீவது ஈகையன்று. (46) கண்மூடித்தனமாய்ச் செலவுசெய்வோன், அதி துரிதத்தில் துன்பத்தையும், வறுமையையும் சம்பாதிக்கிறான். (47) தமது நாட்டிற்காக, உண்மையில் பாடுபடுவோர், புகழுடம்பைப் பெறுகின்றனர். (48) தனவான், பிறர் உழைப்பால் பெறும் பொருளைத் தான் பெரிதுங் கவர்வதால் அவன் திருடனாகிறான். (49) தமக்குள்ள எல்லாவற்றையுந் தியாகஞ்செய்து, தமக்கென ஒன்றின்றி, பிறர்க்கெனவாழும் பெரியோர் வாழ்வே "இயற்கை வாழ்" வாம்—"இன்பவாழ்"

வாகும்—"மனித வாழ்"வாகும். (50) உழைப்பின்றி யுண்போர் "திருடர்". (51) கற்றபடியே நடப்போர் "அறிஞர்". (52) பொய்ம்மொழிவோர் எஞ்ஞான்றும் "மெய் இன்ப"த்தைக் காணார். (53) பாவத்தைக்கண்டு அஞ்சுவோர் "வீரர்". (54) தன் பெருமை கூறித் திரிவோன், தன் மதிப்பையும், தன் புகழையும் இழக்கிறான். (55) இல்லறத்திற் கிலக்காவோர், துறவறத்திற்கும் அருகராகிறார். (56) தெரியாதவன் எல்லாம் தெரிந்துவிட்டதாகக் கூறுகிறான்; தெரிந்தவரோ எமக்கொன்றும் தெரியாது என்கிறார். (57) தீர ஆலோசியாமல் செய்யப்படும் காரியம், பின் வருந்துதற்கும், கவலைகொள்ளுதற்கும் உரியதாய்விடும். (58) மகிழ்ச்சிக்குக் காரணம் பிறர்க்கு (வறிஞர்க்கு) உதவுதலேயாம். எனவே, அறஞ்செய்து அதை யடைவோமாக. (59) பிற மதத்தவர், நமக்கு வெறுப்பைத் தருமாறும், சினத்தை யூட்டுமாறும் நடந்துகொள்ளலாம்; அதற்காக, இரங்கி, ஒதுங்கவேண்டுமேயன்றி, வேறு விதமாய் நடந்துகொள்ளுதல் நலமல்ல; காரணம், அவர்கள் தெரியாமல் செய்வதே. (60) "அநுபவம்" மிகப் பெரிதும் உயரியது. ஒரு "அநுபவம்" பெற ஓராயிரம் பொன்னும் செலவிடலாம். (61) அறிவு பெறுதற்கு உரியவை பலவுள; அவற்றுள் "மெய்ந்நூல்கள்," "பத்திரிகைகள்," "நல்லோருறவு" முதலியவை முக்கியமாம்; பத்திரிகைகளில், மெய்யுணர்த்தும் பத்திரிகைகளை ஆய்ந்து, படித்து, இன்புறுதல் நலந்தருவதாகும். (62) "சோம்பேறி," பெருத்த தனவந்தனா யிருப்பினும், அதி விரைவில் வறுமையாளனாய் விடுவான். (63) "எளிய வாழ்வு" நடத்துவோனே "ஐசுவரியவான்". (64) அறிஞர் அறிவையே தேடுகின்றனர். (65) தாளாண்மை யுள்ளோரிடம் "ஞானம்" அதிகமாயுண்டு. (66) நீதிவழுவாது கடனாற்றுவோன், மெய்ப்பலனை யடைந்து இன்புறுகிறான். (67) தமது பொருளை வாரி இறைத்து, விருத்தியும் புகழும் அடைவாருமுண்டு; தமது தனத்தை ஒன்றும்செய்யாமல் வைத்திருந்து, ஏழ்மையையும், அபகீர்த்தியையும் பெறுவாருமுண்டு. (68) உழைப்பிற்கேற்ற கூலி ஒவ்வொருவருக்கும் கிடைக்கும். (69) இயற்கை வாழ்வே "மனிதர்"க்கு வேண்டற்பாலது; அதற்கு முதலாவதாக வேண்டப்படுவது "எளிமை வாழ்க்கை"யேயாம். (70) கீர்த்திக்கு முதலாயிருப்பது, "தாழ்மை". (71) பேச்சும், எழுத்தும், செய்கையும் அறமாய்ப் பரிணமிக்க நடப்போர், பேரறவோராவர். (72) ஒருவரை வயதொன்றால்மட்டும் பெரியவரா (அறிஞரா) யெண்ணிவிடக்கூடாது; அவ்வாறே, ஒரு இளைஞரை, அவருடைய வயதினாலேயே "சிறியவர்" எனக் கூறிவிடக்கூடாது. எனவே, இளைஞரிலும் அறிஞருண்டு; பெரியவரிலும் சிறியோருண்டு. (73) சிறு சிறு துன்பங்களைச் சகிக்கக்கூடியவர்களே, பின் பெருந் துன்பங்களைத் தாங்கக் கூடும். (74) மக்களினத்தினும் மாக்களினமுண்டு. (75) பிள்ளைகட்கு விரோதிகள் பெற்றோர். (76) குற்றத்தை மூடுகிறவன் சிநேகத்தைப் பலப்படுத்துகிறான். (77) வழக்குக்கு விலகுவோர், மேன்மையைச் சம்பாதிக்கிறார். (78) தரித்திரர்க்குப் பிச்சையிடுவோர், கடவுட்குக் கடன் கொடுக்கிறார். (79) எப்போழ்தும் "திருப்தி" இன்றியமையாதது. அஃதில்லாதிருப்போர், பெரும் தனவந்தராயிருப்பினும், உண்மையில் "தரித்திரரே" யாவர். (80) புத்தகங்கள், பத்திரிகைகள் என்பவைகளை விட ஒருவர்க்கு உற்ற நட்பு வேறெதுவுமில்லை. (81) பிறர் கூறும் புத்திமதியை அலட்சியம் செய்வோர் பின் பெரிதும் துன்புறுவது திண்ணம். (82) அறியாத சிறுவர், சிறுமியர்கட்குப் பாலிய விவாகம் செய்வது பெரும்பாவம். (83) அறிவுடைய மக்கட்பேற்றைவிட மேலான பேறு வேறெதுவுமில்லை. (84) ஒருவருடைய "கையெழுத்"தாலேயே அவருடைய நடத்தையையும், பிறவற்றையும் அநுமா

னித்துவிட முடியாது. (85) ஒருவனை உயர்ந்தோனுக்குவதும், தாழ்ந்தோனுக்குவதும் பெரும்பாலும் பெற்றோர் வளர்ப்பிலிருக்கிறது. (86) வீணருடன் கூடிக் காலப்போக்கு நடத்துவதிலும் நூல்களைப் படித்துக்கொண்டிருப்பது, மகிழ்ச்சியையும், அறிவையுமூட்டும். (87) சுடர் விளக்காயினும் தூண்டுகோலொன்றுவேண்டும். (88) சுயமதிப்பில்லாதவன், எஞ்ஞான்றும், கவலையும் துன்பமுமே யடையக்கூடும். (89) கண்ணைக் காப்பதிலும் உயர்ந்த "மான"த்தைக் காப்பது அறிவுடைமை. (90) உண்மை யுணர்வு பெருதோர், எழுதும் எழுத்தும், பேசும் பேச்சும் பயனை யளியாது போவது மன்றி, துன்பத்தைப் பெருக்கும். (91) இன்று இகழப்படும் மனிதன், என்றுமே அந்நிலையிலிரான். ஆகவே, எவரையுமே இகழ்தல் கூடாது. (92) அன்பொன்றே சகல பாவங்களையும் போக்கும். (93) இடுக்கணில் உதவுவோன் உத்தம மித்திரன். (94) நியாயத்தில் முகதாட்சணியம் பார்ப்போன் நியாயவாதி யன்று. (95) மனச் சான்றின் வழி நின்று நடவாதவன் "மனித"னல்லன். (96) பெற்ற தாயைவிட நமக்கு உதவி செய்பவர் எவருமேயில்லை. (97) சதா ஆசையை யுடையவன் எவ்வளவு பணம் வைத்திருந்தாலும், அவன் ஏழையே யாகிறான். (98) தன்னுயிர் போல் மன்னுயிரை எண்ணுவோன் மன்னன். (99) கடன் படுதலினும் இரந்துண்ணல் நலம். (100) மதுவினுமினியது கடவுள் வழிபாடு. (தொடரும்.)

திரு. வீ. மு. பொன்னையா.

---

# ஞானப்பகுதி.

## பகவத்கீதை வசனம்.

(தொகுதி 11, 484-ம் பக்கத் தொடர்ச்சி.)

பகவான் அருளிச்செய்தல்:—ஹே பரந்தப! அதாவது உட்பகை புறப்பகை என்பவற்றை வெருட்டவல்ல அர்ச்சுன! பிராமணர் முதலிய மூவர்க்கும் சூத்திரர்க்கும் கருமம் பரஸ்பரம் வேறு வேறாயிருக்கும். சமம், தமம், தவம், சௌசம், சாந்தி, ஆர்ஜவம், ஞானம், விஞ்ஞானம், ஆஸ்திக்யம் என்கிற இந்த ஒன்பதும் இயற்கையாலுண்டாகிய பிராமண கருமமாம். இவற்றுள் மனத்தை யடக்குதலே சமம்; வெளி யிந்திரியங்களை யடக்குதல் தமம்; முன்னர்ப் பதினேழாவது அத்தியாயத்திற் கூறியபடி சாரீர,மானஸ,வாசிகங்களாற் செய்யப்படுகிற மூவகைத் தவமே தவம்; சௌசம், உள் வெளிப் பேதத்தாலே இருவகைப்படும்; அவற்றுள் மனத்தூய்மையே உள்; மண் நீர் இவற்றைக் கொண்டு உடலின் மாசகற்றுதலே வெளி; கடின வசனங்களினாலே நிராகரிக்கப்பட்டிருந்தாலும், ஆயுதாதிகளால் தண்டிக்கப்பட்டிருந்தாலும் மனத்தில் குரோத முதலிய விகாரமற்றிருத்தல் சாந்தி, அல்லது க்ஷமை; வஞ்சகத்தன்மை

யில்லாமையே ஆர்ஜவம்; ஆறு அங்கங்களோடு கூடிய வேதத்தையும் வேதார்த் தத்தையும் கிரகிக்கும் அந்தக்கரண விருத்தி விசேஷமே ஞானம்; கரும காண்டத்திற் சொல்லிய யாகாதிகளின் விவேகத்தன்மையும், ஞானகாண்டத் திற் சொல்லிய பரமான்மாவின் ஒருமை யனுபவமுமே விஞ்ஞானம்; சாத்து விகம், சிரத்தை யென்பவையே ஆஸ்திக்யம் (பரலோகம் உண்டென்னும் நம்ப கம் ஆஸ்திக்யமாம்). இவை யாவும் சத்துவகுண வியற்கையாதலாலும், சத்துவ சுபாவமுடையவனே பிராமணனாதலாலும், இவை பிராமண கரும மாயிற்று.

இக்குணங்கள் பிறரிடத்து சத்துவவிருத்தி வயத்தால் ஒவ்வோர் காலத் துண்டாம். அதுபற்றி அன்னிய சாஸ்திரத்தின்கண் இவை நால்வருக்கும் பொதுவான தருமம் என்று கூறப்பட்டுள்ளன.

இனி க்ஷத்திரியகுண சுபாவத்தாலாகிய கருமத்தைப் பகவான் வெளியிடு கிறார்:—

ஹே பார்த்த! சௌரியம், தேஜசு, திருதி, தாக்ஷியம், போரிற் புறங் கொடாமை, தானம், ஈசுரபாவம் என்பவை க்ஷத்திரிய ஜாதியின் இயற்கை யான கருமமாம்.

இவற்றுள் சௌரியமாவது அத்தியந்தம் பலவானையும் அடிக்கத்தக்க பிர விருத்தி வடிவமான வீரத்தன்மை; பகைவராற் றேல்வியடையாமையாகிய ஆற்றலே தேஜசு; பெரிய விபத்து வந்தபோதும் தேகேந்திரியாதிகளின் வியாகூலம் இல்லாமை திருதி; விரைவாக உண்டாகிய காரியத்தும் வியாமோகமில்லாதிருக்கும் சாதுர்யமே தாக்ஷியம்; யுத்தகளத்தில் முது கிடாமையே போரிற் புறங்கொடாமை; மனதாரப் பொன், பசு, வீடு, அன்னம், பூமி முதலியவற்றைத் தக்கவர்க் களித்தல் தானம்; பிரஜைகளை ரக்ஷிக்கும் பொருட்டுத் தனது சேவகர் முதலியோரிடம் தன் பிரபு சக்தியை வெளி யிடல் ஈசுரபாவம்.

பகவான் கூறுதல்:—ஹே! காண்டீப! இனி வைசிய சூத்திர ரிருவரின் குண சுபாவத்தாலாகிய கருமங்களைச் சொல்லுகிறேன் கேட்பாயாக:

பயிரிடுதல், பசுவோம்பல், வாணிபஞ்செய்தல் ஆகிய இவை வைசியருக் குரிய சுபாவ கருமம். சூத்திரனுக்கோ இரு பிறப்பாளராகிய மூவர்க்கும் சேவை புரிதலே சுபாவ கருமம்.

முதன் மூன்று வருணத்தார்க்கும் தொழில் செய்தலே சூத்திரனுக்குச் சுபாவமான கருமமென்று பகவான் பொதுப்பட அருளினும், சூத்திரன் தனது குடும்ப சம்ரக்ஷணைக்கு வேண்டிய பொருளை க்ஷத்திரிய வைசியர்களுள் எவரிடத்தில் அதிகமாகப் பெறுகின்றானோ அவர்க்கு மட்டும் வேலை செய்தற் குரிய னென்பதும், அவ்வாறு பிராமணனிடம் பொருள் பெறினும் பெறாவிடி னும் தனக்குப் புண்ணியமுண்டாகும் பொருட்டுச் சூத்திரன் பிராமணனுக்குப் பணிசெய்ய வேண்டுமென்பதும், உழவுத்தொழிலும் வேந்தன் கொடுப்பின் தண்டத்தலைமையும் (சேனாதிபதித்துவமும்) சூத்திரன் செய்யலாமென்பதும்

பிறவும் மேலோர் துணிபு. இவற்றைத் தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல் சூத்திரம் 80, 81-லும், அகத்திணை யியல், சூத்: 29, 30, 31-லும், நன்கு காணலாம். நான்காம் வருணத்தானைத் தமிழர் வேளாளனென்றும் வட நூலார் சூத்திரனென்றும் அழைப்பதுண்டு.

பகவான் கூறுதல்:—ஹே அர்ச்சுன! இனி அவனவனுக்கு விதிக்கப்பட்டிருக்கின்ற கருமத்தில் சிரத்தையுடையவன் சம்சித்தியை யடைகின்றான். தனது கருமானுஷ்டானத்திலே யிருப்பவன் எவ்வாறு சித்தியை யடைவானோ அதையுஞ் சொல்லுகிறேன் கேட்பாயாக: பிரவிர்த்தியானது பிராணிகளுக்கு எவரிடத்தினின்றும் உண்டாகின்றதோ, எவரால் இச் சகல பிரபஞ்சமும் வியாபிக்கப்பட் டிருக்கின்றனவோ அவரை மனிதன் தனக்குரிய கருமத்தாலே ஆராதித்துச் சித்தியை யடைகின்றான்.

அல்லாமலும் தன்னுடைய தருமம் குணமில்லாததாயினும் அல்லது கிரமப்படி அநுஷ்டிக்கப் படாததாயினும், ஒழுங்கா யனுஷ்டிக்கப்பெற்ற பிறரது தருமத்தினும் சிறந்ததாம். சுபாவத்தாலுண்டான கருமத்தைச் செய்கின்றவன் பாபத்தை யடையமாட்டான். எப்படி விஷமானது தன்னிடத்துள்ள புழுக்களுக்குத் தோஷமில்லாமலும் மற்ற பிராணிகளுக்குத் தோஷமுமாகின்றதோ அப்படி சுவதருமம் பிறர்க்குத் தோஷமானாலும் உரியவனுக்குத் தோஷமாகாது.

பகவான் கூறுதல்:—ஏ கௌந்தேய! இயற்கையா லேற்பட்ட (உடன் பிறந்த) கருமம் தோஷத்தோடு பொருந்தியதாயினும் அதனைக் கைவிடக் கூடாது. எவ்வாறு அக்கினி புகையால் மூடப்பட்டிருக்கின்றதோ அவ்வாறு எல்லாக் கருமங்களும் தோஷத்தாலே சூழப்பட்டிருக்கின்றன.

தன்னுடனுதித்தது முக்குண வயத்ததாதலின் தோஷத்தோடு சேர்ந்ததானாலும், சுவகரும பரகருமங்களனைத்தும் புகையால் அக்கினி மூடப்படுதல் போலத் தோஷத்தால் மூடப்பட்டிருக்கின்றன. அவ்விதந் தோஷ சகிதமான கருமத்தை யேன் அனுஷ்டிக்க வேண்டுமெனின், மனிதன் கருமத்தை விட்டிருக்க முடியாது. கருமம் தோஷமுள்ளதா யிருக்கையில், ஒருவன் மற்றொருவன் கருமத்தை அனுஷ்டித்தலால் பாதகம் யாதெனில், பிறருடைய கருமத்தை யனுஷ்டித்தலால் அதிக பாதக முண்டென்று மேலே சொல்லப்பட்டிருக்கின்றது. பரமார்த்த சந்நியாசியாகிய பிரமஞானி கருமங்களை விடக்கூடுமாயினும் மற்றவர்கள் கருமங்களை விடக்கூடாது (இது சங்கருடைய அபிப்பிராயம்).

துக்கத்தைத் தருவதானாலும், கருமம் சுலபமாகச் செய்யக்கூடியதாகையாலே ஞானமார்க்கத்திற்கு யோக்கியனாயினும் கருமத்தைச் செய்யாமல் விடக்கூடாது. ஞானாரம்ப கருமாரம்பங்கள் துக்கத்தோடு கூடி யிருக்கின்றன, அக்கினியோடு புகை பிறந்திருத்தல் போலக் கருமமும் ஞானமும் துக்கத்தோடு பிறந்திருக்கின்றன வாயினும் கன்மயோகம் சுலபமானதென்

றும் ஞானயோகம் கடினமானதென்றும் தாத்பரியம். (இது ராகவேந்திரரன அபிப்பிராயம்).

பகவான் கூறுதல்:—ஏ பார்த்த! எல்லாப் பொருள்களிலும் அபிமான மின்றி யிருக்கின்ற புத்தியை யுடையவனும், மனத்தைச் சயித்த அல்லது அகங்காரமில்லாதவனும், பலத்தில் விருப்பமற்றவனுமான புருஷன் பலசங்கத் தியாகமாகிய சந்நியாசத்தாலே சிறந்த சித்த சுத்தியை யடைகிறான்.

(இந்த சுலோகத்திற்கு சங்கரர், 'புத்திரமித்திர தன கனகாதி வஸ்துக் களிலே தனதென்னும் அபிமானத்தைவிட்ட புத்தியை விட்டவனும் மனத்தை வென்றவனும் புத்திராதிகளில் ஆசையற்றவனுமான ஆத்ம ஞானி சிரேஷ்டமான ஞான நிஷ்டையை அல்லது சத்தியோ முக்தியை (தக்ஷணமே பிரம சொரூபமாவதை) செவ்வையா யடைந்திருக்கிற பிரமஞானத்தாலே அல்லது பிரம ஞானமுண்டாய்ச் சகல கருமங்களையும் விட்டமையாலே அடைகின்றான்' என்றும், ராகவேந்திரர் 'கருமபலன் முதலியவற்றில் அபி மானமற்றிருக்கின்ற புத்தியை யுடையவனும், மனத்தைச் சயித்தவனும், தான் கருத்தா அல்லன், ஈசுவரனே சர்வ கருத்தாவென்றறிந்து கருத்திருத்துவாபி மானத்தை விட்டவனும், அபிமான பலத்தியாகங்களான சந்நியாசத்தோடு கூடினவனுமான புருஷன், மேலே கண்டபடி ஈசுவராராதனை ரூபமான கரு மங்களைச் செய்துவந்தால் உத்தமமான ஞான யோகத்திற்குப் பலனாகிய தியான நிஷ்டையை யடைவான்' என்றும் அபிப்பிராயங்கொண்டிருக் கின்றனர்). (தொடரும்) சீடன்.

---




## இராட்டினமும் அதன் பெருமையும்.

### இந்தியாவின் பண்டைச் சிறப்பு.

பண்டைக்காலத்தில் கலைகளிலும், கைத்தொழில்களிலும் நாம் அடைந் திருந்த பெருமையைப் பற்றியும் முன்னேற்றத்தைப் பற்றியும் இங்கு ஒன்றும் அதிகமாகக் கூறவேண்டுவதில்லை. பண்டை நாட்களில் நம்முடைய நாட்டில் இருந்தவர்கள் எல்லா விஷயங்களிலும் மிகுந்த தேர்ச்சி யுள்ளவர்களாகவும், திறமை யுள்ளவர்களாகவும் சிறந்து விளங்கினார்கள். கைத்தொழில்களெல் லாம் அக்காலத்தில் பரம்பரையான குடும்பத் தொழில்களாகவே யிருந்து வந்தன. கிராமங்களிலும் நகரங்களிலும் வசித்து வந்தவர்கள் தங்களுக்கு ஓய்வு கிடைத்த நேரங்களிலெல்லாம் இராட்டினத்தில் நூல் நூற்றல், நெசவு செய்தல், பாய்கள் செய்தல், கூடைகள், பெட்டிகள் செய்தல், பிரம்பினால் பல வேலைகளைச் செய்தல் போன்ற பல தொழில்களை யெல்லாம் தங்களது வீட்டிலேயே செய்து வந்தனர். அத்தொழில்களில் பல இன்னும் அழியா

மல் நம்நாட்டில் இருந்து வருவதை நம் நாட்டவர் நன்கு அறிவர். அக்காலத்தில் நம் நாட்டுப் பெண்மணிகள் கைத்தொழில்களை அபிவிருத்தி செய்யும் விஷயத்தில் மிகவும் பாடுபட்டு உழைத்து வந்தார்கள். நம் நாட்டில் வசித்து வந்த ஆடவர்களும், பெண்மணிகளும் அக்காலத்தில் நம் நாட்டுத் தொழில்களை வளர்க்கும் விஷயத்தில் செய்து வந்த முயற்சிகள் அளவிடற்பாலன வல்ல. அக்காலத்தில் நம் நாட்டவர் செய்து வந்த பொருள்களை யெல்லாம் உலகில் உள்ள மற்ற நாட்டவர்கள் கண்டு வியந்து அவைகளைப் பொன்னே போல் போற்றி வந்தார்கள். நம் தேசத்தில் நம் கைத்தொழில்களெல்லாம் மிகவும் உன்னதமான நிலைமையிலிருந்து வந்தன. உதாரணமாக டெக்கா நகரில் செய்யப்பட்டு வந்த மஸ்லின் துணியை எடுத்துக்கொள்ளுங்கள். அந்த மஸ்லின் துணி பனித்துளிகளால் நனைக்கப்பட்டால் அதை ஒருவரும் பார்க்கவே முடியாது. பனித்துளிகளால் நனைக்கப்பட்ட ஒரு துணி கண்ணுக்குத் தெரியாமலிருக்குமானல் அதனுடைய பெருமைதான் என்ன! அது எவ்வளவு அருமையாக நம் நாட்டுச் சகோதரர்களால் நெய்யப் பட்டிருக்க வேண்டும்? டெக்காவில் நெய்யப்பட்டு வந்த மஸ்லின் துணிக்கு உலகத்திலுள்ள பல தேயத்தவர்களும் பொன்னையும் பொருளையும் வாரிக் கொடுத்தார்களென்றால் அதனுடைய பெருமையையும், அருமையையும் பற்றிக் கூறவும் வேண்டுமோ? அக்காலத்தில் ரோமாபுரியிலும், இங்கிலாந்திலும் இருந்தவர்கள் நம் நாட்டில் நெய்யப்பட்ட டெக்கா மஸ்லின் துணியைக் கண்டு வியந்து அதை வாங்குவதற்கு அதிகமான பவுன்களைக் கொட்டிக் கொடுத்தனர். ரோமாபுரியிலிருந்த பெண்மணிகள் டெக்கா மஸ்லினுக்குப் பவுன்களை கொட்டிக் கொடுப்பதைக் கண்ட ரோம் தேசத்திய தேசாபிமானிகளில் ஒருவரான ஸ்ரீமான் "**பிளினி**" என்பவர் ரோமாபுரி வாசிகளின் நிலைமையைக் கண்டு மனம் சகியாமல் வருந்தி "ரோமாபுரி வாசிகளே! நீங்கள் டெக்கா மஸ்லினுக்காக ஏராளமான பவுன்களை இப்படி வருஷா வருஷம் கொட்டிக் கொடுப்பீர்களானல் சீக்கிரத்தில் நமது நாடு மிகவும் எளிய நிலயை அடைந்துவிடும்" என்று அவர்களுக்கு எச்சரிக்கை செய்திருக்கின்றார். இதிலிருந்து டெக்கா மஸ்லின் மூலமாக நம் நாடு ஏராளமான திரவிய லாபத்தை அடைந்திருக்கின்றது என்பது நன்கு புலனாகவில்லையா? அக்காலத்தில் இந்தியா தேசத்திலிருந்த நமது முன்னோர்கள் மரக்கலங்களில் ரோமாபுரி, எகிப்து, கிரீஸ், இங்கிலாந்து முதலிய தேசங்களுக்குச் சென்று அங்கு நம் நாட்டுச் சாமான்களை யெல்லாம் அதிகமான இலாபத்திற்கு விற்றுப் பொன்னையும் பொருளையும் வாரிவந்தார்கள். சமீபத்தில் மதுரைமாநகரில் ரோமாபுரியின் நாணயங்கள் பல அகப்பட்டிருக்கின்றன. இதிலிருந்து அக்காலத்தில் பாண்டிய நாட்டவர்களும் கப்பல் வியாபாரம் நடத்தி வந்தார்களென்பது புலனாக வில்லையா? கைத்தொழில்களும், வியாபாரமும் அக்காலத்தில் நம் நாட்டை ஆண்டு வந்த மன்னர்களால் ஆதரிக்கப்பட்டு, வளர்க்கப்பட்டு வந்திருப்பதைப் பல மன்னர்களின் சரித்திரங்களிலிருந்து நாம் நன்கு அறிந்து கொள்ளலாம். கைத்தொழில்களிலும், வாணிபத்திலும், விவசாயத்தி

லும் நம் நாடு சிறப்புற்றோங்கி யிருந்ததனால் அக்காலத்தில் நம் நாட்டில் இருந்தவர்கள் பஞ்சம் என்பதையே அறியாமல் சந்தோஷமாகத் தங்களது வாழ்க்கையை நடத்தி வந்தார்கள். அக்காலத்திலிருந்தவர்கள் ஆடம்பரமாகவும், படாடோபமாகவும் தங்களுடைய வாழ்க்கையை நடத்தாமல் சதாரணமாகவே நடத்தி வந்தார்கள். அவர்கள் சோம்பேறிகளாகத் தங்களது வாழ் நாட்களைக் கழித்தார்களில்லை. அதனால்தான் நம் நாட்டின் பொருளாதார நிலைமை அக்காலத்தில் மிகவும் சிறப்புற்றோங்கியிருந்தது. உலகத்தில் உள்ள பல நாட்டவரும் அக்காலத்தில் நமது தாய் நாடாகிய இந்தியாவைப் **"பொன் விளையும் பாரத நன்னாடு"** என்று போற்றி வந்தார்கள்.

இந்தியா உலகிற்கே காமதேனு போன்றது. எங்குப் பார்த்தாலும், பச்சைப் பசேலென்று பயிர்கள் நிறைந்து, தேனும், பாலும் சொரியும் நாடு உலகில் நமது தாய் நாட்டைத் தவிர வேறு ஒன்றுமில்லை. சகலவிதமான தான்யங்களும், விளை பொருள்களும் நம் நாட்டைப்போல் வேறு எந் நாட்டிலும் விளையவில்லை. நமது நாட்டு மக்களுக்கு வேண்டிய ஆடைகளுக்கும், உடைகளுக்கும் நம் நாட்டிலேயே ஏராளமான பருத்தி சாகுபடியாகின்றது. பண்டை நாட்களில் நமது முன்னோர்கள் நம் நாட்டு விவசாயத்தில் தங்களது கவனத்தைப் பெரிதும் செலுத்தி அதை மிகவும் அபிவிருத்தி செய்து வந்தார்கள். பல வழிகளிலும் முன்னேற்ற மடைந்திருந்த நம் நாடு இப்படிக் கேவலமான நிலையை அடையக்காரணம் என்ன? இதைத் தமிழ் மக்களாகிய ஒவ்வொருவரும் நன்கு சிந்தித்துப்பார்த்தால் மனமுடைந்து மிகவும் வருந்துவார்கள் என்பதில் சிறிதும் ஐயமில்லை. (தொடரும்).

**நூற்கலைஞன்.**

---

# வைத்தியப் பகுதி.

## தேகாரோக்கியத்தை அடையும் மார்க்கம்.

### "Physical Culture Magazine" என்னும் ஆங்கில சஞ்சிகையினின்று எடுக்கப்பட்ட சாராம்சம்.

மனிதன் ஒருவன் அடையவேண்டிய செல்வங்களில்தலையாயது தேகாரோக்கியமாகும். ஆன்றோரும் "நோயற்றவாழ்வே குறைவற்ற செல்வம்" என்று கூறியுள்ளார்கள். தேகாரோக்கியத்தை அடைந்துவிட்டால் அதைக் காப்பாற்றிக்கொள்வது சுலபம். பலர் அறியாமை காரணமாகவும், ஊக்கக் குறைவு காரணமாகவும் தேகாரோக்கியத்தை அடைய முயல்கின்றார்களில்லை. அப்படி அடைந்தாலும் பின்னர் அதை நிலைநிறுத்த முயலாது எளிதில் கைசோர விடுகின்றனர்.

சிறிது கஷ்டமும் தியாகமும் மேற்கொண்டால், போதுமான சௌகரியங்கள் இல்லாமல் போனாலும், தேகாரோக்கியத்தை அடைந்து அது நின்றிலங்கச் செய்துகொள்ளலாம்.

தேகாரோக்கியத்தை அடைய அநேக விஷயங்களை மேற்கொள்ள வேண்டும். அவைகளில் மிகவும் இன்றியமையாதன பின்வருவன:—

1. ஆகாரம், 2. தேகப்பயிற்சி, முறையான வழியில் பிராணவாயுவை உட்கொள்ளுதல், 3. தேகத்தை நிலையில் வைத்தல், 4. சுத்த ஆகாயமும் வெளிச்சமுங்கொள்ளல், 5. பரிசுத்தம், 6. துயில், 7. சன்மார்க்க நெறிகளைக் கடைப்பிடித்தொழுகல்.

1. ஆகாரம்:—ஆகாரத்தை உட்கொள்ளும் விஷயத்தில் மிதமாய் இருக்க வேண்டும். ஒரு நாளைக்கு இரண்டு தடவை ஆகாரம் கொள்ளல் ஏற்புடைத்தாம். மூன்று தடவைக்குமேல் உட்கொள்ளல் அநாவசியத்தின் பாற்படும். நினைத்த போதெல்லாம் உட்கொள்ளும் வழக்கம் தேகாரோக்கியத்திற்குப் பங்கத்தை யுண்டாக்குவதாகும். ஒருவன் உட்கொள்ளும் ஆகாரம் நாவிற்கு ருசியைக் கொடுக்கக்கூடியதாய் இருக்கவேண்டும். உணவை நிதானமாய் உட்கொள்ள வேண்டுமேயன்றி அவசரம் அவசரமாக உட்கொள்ளக்கூடாது. உணவை நன்றாய் மென்று விழுங்கவேண்டும். அதனால், ஜீர்ணசக்தி ஏற்பட்டு தேகத்துக்கு நன்மை யுண்டாகும்; அஜீரணம், பேதி முதலான கோளாறுகள் நிகழா. ஒரு மனிதன் தினந்தோறும் சுத்தமான பாலையும், பழவகைகளையும் சாப்பிடவேண்டும். காலையில் துயில் நீத்தவுடன் ஒருகுவளை (Glass) தண்ணீரைப் பருகுதல்வேண்டும். ஆகாரம் உட்கொள்ளுவதற்கு முன் ஆவது பின் ஆவது தண்ணீரைப் பருகல்வேண்டும். சாப்பிட்டுக்கொண் டிருக்குங்கால் தண்ணீர் குடிக்க நேரின் ஒரே மொத்தமாய்க் குடித்துவிடாமல் சிறிது சிறிதாகக் குடிக்கவேண்டும். தேயிலை அல்லது காபி பருகவேண்டியதாயிருந்தால், கொஞ்சமாகத்தான் குடிக்கவேண்டும். கூடுமானவரை, லாகிரி வஸ்துக்களை அறவே ஒழித்துவிட முயலுதல் வேண்டும். தித்திப்பான வஸ்துக்களையும் வாசனைத் திரவியங்களையும் தள்ளிவிடல் வேண்டும். பசியெடுத்து ஆகாரம் உட்கொண்டால் பல நன்மைகள் ஏற்படும்.

2. தேகப்பயிற்சி:—தேகப்பயிற்சிக்கெனக் காலையிலும் மாலையிலும் ஒரு நேரத்தைக் குறிப்பிட்டு வைத்துக்கொள்ள வேண்டும். ஒருவன், காலையில் ஸ்நாநம் செய்வதற்கு முன் முல்லர் என்பவர் கூறியுள்ள தேகப்பயிற்சிகளையும் பிராணாயாமத்தையும் மேற்கொள்ளுதல் நன்மை. குளித்தானவுடன் நன்றாய்த் துடைத்துக்கொள்ள வேண்டும். சுத்தமான காற்றோட்டம் உள்ள இடங்களில் பதினைந்து நிமிடம்வரை உலவிவருதலும் நலம். மாலை நேரத்தில் குறைந்தது அரைமணிநேரமாவது வெட்டவெளியில் தேகப்பயிற்சி செய்ய வேண்டும். மாலையில் செய்யும் தேகப்பயிற்சிக்கு, நடத்தலிலும், டென்னிஸ், கிரிக்கட் முதலான பந்தாட்டங்களிலும் காலங்கழித்தல் நலம். மாலையில் குளித்தலும் தேகாரோக்கியத்திற்கு நன்மை. துவிச்சக்கிரவண்டி விடுவதே போதுமான தேகப்பயிற்சி யாகும் என்று அநேக மாணாக்கர்கள் எண்ணுகின்றார்கள். இது தவறான எண்ணமாகும். மூச்சு வாங்கிவிடுதல் சம்பந்தமான சதைகட்கு (Respiratory Muscles) இப்பயிற்சி போதுமானதாய் இல்லை. ஆகையால் இருதயத்திற்கு அதிகமான வேலை ஏற்பட்டு விடுகின்றது.

3. முறையான வழியில் பிராண வாயுவை உட்கொள்ளலும், தேகத்தை நிலையில் வைத்தலும்:—மிகச் சிலரே சரியான முறையில் பிராணவாயுவை உட்கொள்ளுகின்றனர். சாய்ப்பு மேஜைகளின் மீது தலை குனிந்து வேலை செய்பவர்கள் இவ்விஷயமாய்ச் சிறிது கவனித்தல் இன்றியமையாததாகும். காற்றை நன்றாய் உள்ளே வாங்கிவிடுதல் தேகாரோக்கியத்தைக் கொடுப்பதாகும்; இதனால் இரத்த ஓட்டம் நன்றாய் ஏற்படும்; சுவாசப்பைகளும் சுத்தமாகின்றன. சுவாசங்கள் சம்பந்தமான நோய்கள் அணுகமுடியாமற் போகின்றன.

நன்ருய்ச் சுவாசிக்கவேண்டுமாஞல் நடக்கும்போதும் உட்காரும்போதும் தேகத்தை நிமிர்ந்த போக்கிலேயே வைத்தல் வேண்டும். காலையில் படுக்கையைவிட்டு எழுவதற்கு முன்னும் எழுந்த பின்னரும் தேகப்பயிற்சிகளை ஒருவன் செய்து வருவானுயின் நல்ல மாதிரியாய்ச் சுவாசிக்க ஏது உண்டாகும். எப்போதும் மூக்கு வழியாகத்தான் சுவாசத்தை உட்கொள்ளவேண்டும் எக்காரணம்பற்றியும் இவ்வழியினின்று வழுவுதல் கூடாது. **பிரியன்.**

## பெண்மக்கள் பகுதி.

### பெண் கல்வியின் நவீன செய்கை

### ஓர் சம்பாஷணை.

**விசாலாக்ஷி:**—சகோதரி மீனுக்ஷி! நீ எப்பொழுது ஊரில் இருந்து வந்தாய்?

**மீனுக்ஷி:**—நேற்றுத்தான் வந்தேன்; நீ எந்த வகுப்பில் வாசிக்கிருய்?

**விசாலாக்ஷி:**-மூன்ரும்வகுப்பில் வாசிக்கிறேன்; நீ எந்தவகுப்பில் வாசிக்கிருய்?

**மீனுக்ஷி:**—இரண்டாம் வகுப்பில் வாசிக்கிறேன்.

**விசாலாக்ஷி:**—உங்கள் பள்ளிக்கூடத்தில் என்னென்ன பாடங்கள் சொல்லிக் கொடுக்கிருர்கள்?

**மீனுக்ஷி:**—படிப்பு, எழுத்து, கணக்கு, நாடகம், டான்சு, தில்லாஞப்பாட்டு, விகடம் இவைகள்.

**விசாலாக்ஷி:**—இனும் கொடுக்கும் பொழுது என்ன பரீக்ஷை செய்கிருர்கள்?

**மீனுக்ஷி:**—நாடகம், டான்சு, தில்லாஞப்பாட்டு, விகடம் இவைகளின் பரீக்ஷை.

**விசாலாக்ஷி:**—எங்கள் பள்ளிக்கூடத்திலும் அந்த மாதிரியாகவே நடந்து வருகிறது; ஷை வீண் காரியங்களுக்கு இனும் கொடாமலும், ஷை வீண் காரியங்களைப் பள்ளிக்கூடத்தைவிட்டு விலக்கியும், நீதிப்பாடம், எழுத்து, கணக்கு, நன்னடக்கை, கடவுள் பிரார்த்தனை, தையல் வேலை, வைத்திய சாஸ்திரம் இவைகளைப் பள்ளிக்கூடங்களில் பாடங்களாக ஏற்படுத்தி இவைகளுக்கு இனும் கொடுத்தால் குழந்தைகள் நன்மையடையுமல்லவா?

**மீனுக்ஷி:**—ஆம்; நான் நினைத்ததுபோலவே நீயும் சொல்லிவிட்டாய்; நம் போன்றவர்கள் அநேகரிடம் சம்பாஷித்ததில் எல்லாப் பெண் பாடசாலைகளிலும் இவ்வித கெடுதல் நடந்து வருவதாகவே தெரிகிறது.

**விசாலாக்ஷி:**—இந்தக் குறைகளைப் பெரியோர்களும், உபாத்தியாயர்களும், பள்ளிக்கூட அதிகாரிகளும் கவனித்து நிவர்த்தி செய்தால் குழந்தைகள் பிறவிப்பயனை அடைவது நிச்சயம்.

**மீனுக்ஷி:**—குழந்தை அழும்போது தாய்மார்கள் பால் கொடாமல் இருக்க மாட்டார்கள்; அதுபோல் நாம் குறைகளைச் சொல்லும்போது இனி மேலும் பெரியோர் கவனியாம லிருக்கமாட்டார்கள்.

**விசாலாக்ஷி:**—எல்லாம் வல்ல இறைவன் நம் எண்ணத்தை நிறைவேற்றி அருள்புரிவாஞக. **சீ. நடேசப்பிள்ளை,** சுவாமிமலை.

**குறிப்பு:**—இப்பொழுது பாடசாலைகளில் நாடகம் முதலியவைகளும் பெண்களுக்குப் பயிற்றுவிக்கப் படுகின்றன; மாணவிகளால் பற்பல விடங்களில் நாடகங்களும் நடத்தப்பட்டு வருகின்றன; இவற்ருல் பெண்மக்களுக்கு ஒழுங்கீனச் செய்கைகள் வளர்வதன்றி வேருெரு பயனுமின்ரும்; இதைப்

பற்றிப் பல அறிஞர்கள் பல பத்திரிகைகளில் மிகுதியும் கண்டித் தெழுதி வருகின்றனர். அப்படி யிருந்தும், நவீன நாகரீகத்தால் கெட்டவற்றை யெல்லாம் நல்லனவென்று தீர்மானித்து, 'இப்படிச் செய்வதுதான் நாகரிகம்; இதனுல் தீமை யுண்டாகுமென்று சொல்வது பயித்தியக்காரத்தனம்' என்று குருட்டு நீதிபேசித் தங்கள் மனம் போனவாறே நடப்போர் மலிந்திருக்கும் காலம் இதுவாதலால் இந்த அனுசாரப்போதன முறைகள் நின்றபாடில்லே. அதனுலேயே நண்பர் சம்பாஷணை ரூபமான இவ்வியாசத்தை எழுதியிருக்கின்ருர். ஆதலின், புத்திமான்கள் இதைக் கவனித்து இவ் வொழுங்கீனங்களை நீக்க முயலுவது நலம். அந்தோ! பெண்கள் விருத்தியாகத்தக்க கல்வி முறைகள் எத்தனையோ இருக்கின்றனவே. இந்த நாடகமும், டான்சிங்கும் எதற்கு? மனிதரின் மனேதத்துவத்தின் இயற்கை தெரிந்த அறிஞர் இதை ஆழ்ந்து யோசிப்பார்களாயின் இதனுலுண்டாம் தீமை இன்னதென விளங்கும். இவற்றை விடுத்து தெய்வஸ்தோத்திரப் பாடல்களேயும், நீதிப்பாடல்களேயும், மங்களப்பாடல்களேயும், கல்யாணப் பாடல்களேயும், குழந்தை தாலாட்டு முதலியவைகளேயும் பெண்மக்களுக்குப் பயிற்றுவிப்பது நன்மை பயக்கும். புத்திமான்களே! நாடகமேடைகளில் நடிப்பவர்களுள் பெண்களே மிகுந்திருப்பதற்குக் காரணத்தையும் ஆராய்ந்து பாருங்கள். ப-ர்.

## விநோதப் பகுதி.

### உலக விசித்திரம்.

**துட்டுப்பிடுங்தும் உபசாரம்:**—'இட்டலி இரண்டு, தோசை இரண்டு கொண்டுவந்து வைக்கட்டுமா? அல்லது மைசூர் பாக், லாடு, சொச்சியப்பம் தரட்டுமா?' என்று இன்னம் தம்மிடமிருக்கும் பலகார தினுசுகளே யெல்லாம் மடமடவென்று ஒரே மூச்சில் பாடம் ஒப்புவிக்கும் தற்கால நவீன நாகரீக காபி கிளப்புகளின் ஆட்கள், பிரயாணிகள் வாயிற்படியிலேறும் பொழுதே அவர்களே மேற்கண்டவாறு தடபுடலாக உபசரிப்பதின் நோக்கமென்ன?—பிரயாணிகள் களைதீர உண்டுகளிக்க வேண்டுமென்னும் அன்பின் பெருக்கிஞலா?—தங்கள் முதலாளிகளுக்கு மிகுந்த இலாபம் கிடைக்கச்செய்து அதனுல் தாம் நன்மைபெற வேண்டுமென்னும் சுயநலங்கொண்டா? எருதின் வருத்தம் காகமறியுமா? * * * *

**ஒரு ரயில்வே ஆபீஸரது மொழி:**—வெளியிலுள்ளோர் பலர் ரெயில்வே உத்தியோகத்தைப் பெறப் பெரிதும் விரும்பி அபேக்ஷிக்கிருர்கள்; வேண்டிய முயற்சியும் எடுத்துக்கொள்ளுகிருர்கள்; இலஞ்சமும் கொடுக்கிருர்கள். இங்கு இருக்கும் 'கஷ்ட நிஷ்டூரங்களே—தொல்லேகளே—அவர்கள் கண்டார்களா? ஆசைக்கு அல்லது வயிற்றின் கொடுமைக்குக் கண்ணேது? * * *

**கடன்காரன் துணிவு:**—ஒருவன் ஒரு தனவந்தரிடம் கடன் வாங்கும் பொழுது எவ்வளவோ கெஞ்சிக் கூத்தாடி வணங்கி இணங்கி இந்திரஜால மகேந்திர ஜாலமெல்லாம் புரிந்து, பணத்தைப் பெற்றுச் செல்லுகிருன். கடன் கொடுத்தவர், பல மாதங்களாயும் அப்பணத்தைத் திரும்பப் பெருமையால் கடனளியை வழியில் கண்டு கேட்டால் அவன் அவருக்கு நின்றுகூட பதில்சொல்ல முடிவதில்லே. மீறினுல் 'நீ வாங்குகிற வழியாக வாங்கிக் கொள்' என்றும் அவன் துணிந்து சொல்லி விடுகிருன்.—இது கால விபரீதம் போலும்! காரியம் முடிந்தபின் வீரியம் உண்டு.

தி. சி. குழந்தைவேலன்.

**ஆடும் சீட்டின் அதிசயம்:**—இப்பொழுது சீட்டாட்டத்தில் உபயோகிக் கப்படும் சீட்டுக்கள் கி. பி. 14-வது நூற்றாண்டில் ஜாக்கீஸ் கிரிங்கோன்னியர் என்னும் ஒரு பிரஞ்சு சித்திரகாரியால் கண்டு பிடிக்கப்பட்டன. பிரான்ஸி லிருந்த பித்துப்பிடித்த 6-வது சார்ல்ஸ் என்னும் அரசனுக்கு வேடிக்கையா யிருக்கும்பொருட்டு இவை கண்டு பிடிக்கப்பட்டனவாம். சீட்டிலுள்ள அர சர்கள் தாவீதும், அலெக்ஜாந்தரும், ஸீஸரும், சார்ல்ஸ்மாம். அவற்றிலுள்ள அரசிகள் ஆர்ஜைன், எஸ்தர், ஜியூடித், பல்லாஸ் என்பவர்களாம். "ஜாக்கி களெ"ன்னும் நான்கு வீரர்களும் டேன்ஜாதி ஒஜியர், லான்ஸிலாட், லாஹைர், ஹெக்டார் தே கார்லண்ட் என்னும் பண்டைக்காலக் கதைகளி லுள்ள வீரர்களாம். 1629ல் சீட்டுக்கள் செய்யும் கம்பெனி நிறுவப்பட்டது. முதலாவது ஜேம்ஸின் காலத்தில் சீட்டுக்களுக்கு வரியும் விதிக்கப்பட்டது. இங்கிலாந்தில் ஆடப்பட்ட முதல் ஆட்டத்தின்பெயர் "ட்ரம்ப்" என்பதாம். சில சமயங்களில் முக்கியமான தேச சரித்திரங்களின் விஷயங்களும் சீட்டுக் களில் அச்சிடப்பட்டிருந்தனவாம். (தா-இ.)




**சேலம் ஜில்லா-ராசீபுரம் தாலூகா, ஏழூர்க்கிராமம் சன்மார்க்கசபையார் ஆனந்தனின் 12-ம் வருஷோத்சவ தினமாகிய 16-7-26-ல் ஆனந்தபோதினிக்கு அன்புடன் வாசித்துக்கொடுத்த**

## வரவேற்புப் பத்திரம்.

"தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக் கற்றனைத் தூறுமறிவு"-(குறள்)

தெய்வீகத்தன்மை பொருந்திய இப் பரதகண்டத்திற்கே ஓர் திலகம் போல் விளங்கி, நம் சோதரர்களாகிய சீரிய ஆரியர்களுக்குக் கூரிய அறிவை யளித்து அஞ்ஞானமென்னும் இருளையகற்றி ஞானமென்னும் பிரகாசத்தை மிளிரச்செய்து மோக்ஷத்திற்குச் செல்லும் சூக்ஷுமவழியைக் காட்டியருளிய சுயம்பிரகாச வடிவே வருக! வருக!! வருக!!! நின்வரவு நல்வரவாகுக.

தன்னலங்கருதாது பொதுநலமொன்றையே கருதி அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு புருஷார்த்தங்களையும் அன்பர்களுக்கு அதி பக்குவமாயுபதேசித்து, அன்பர்களின் ஆழ்ந்த நட்பைப்பெற்ற எங்களாருயிர்த் துணையே! எல்லாம்வல்ல பரம்பொருளாகிய பரமனருளால் நினது 11-வது ஆண்டு இனிது முடிந்து பனிரண்டாவதாண்டு பிறந்துவிட்டதென்னும் பேரு வகையால் இவ்வூர்ச் சன்மார்க்கசபையாராகிய நாங்கள் மிக்க குதூகலத்துடன் நின்னை வரவேற்கின்றோம்.

"என் கடன் பணிசெய்துகிடப்பதே" என்ற ஆன்றோர்களின் வாக்கிற் கிணங்க, நின் உடல், பொருள், ஆவி மூன்றையும் உத்தம தேசத்திற்கே அர்ப் பணம் செய்து அபார ஊதியம் புரியும் அன்பின்மிக்க ஆனந்தமே! நன்மார்க் கத்தைப் போதிக்கும் எங்கள் சன்மார்க்க சபைக்கு மாதா மாதம் தவறாது விஜயம் செய்து, எங்கள் சபையென்னும் காவில் கல்வியென்னும் மாரியைப் பெய்து அங்கத்தவர்களின் அறிவென்னும் பயிரை விசாலிக்க (வளர)ச் செய்த ஆனந்த அமிர்தமே! நீ வாழ்க.

ஜீவகாருண்யத்தையே ஜீவாதாரமாகக்கொண்டு ஜீவஜெந்துக்களின் இன் னல்களை யகற்ற அஞ்சாநெஞ்சுடன் அரும்பெருஞ் சமர்புரியும் ஆனந்த வெள் ளமே! இனி மாதம் ஒருமுறையன்று இருமுறை வெளிப்போந்து நின் அன்பர்

களாகிய எங்கள் மனதை உத்ஸாகப்படுத்தி, அதர்மத்தை ஓட்டி, தர்மத்தை நலட்டி, வர்மத்தைப் போக்கி, மர்மத்தை வெளியாக்கி இச்சபையைப் பரிமளிக்கச்செய்ய நாங்கள் நின்னைப் பண்புடன் கேட்டுக்கொள்ளுகின்றோம்.

இந்துமதத்தையே சொந்தமதமெனக்கொண்ட சந்தமுள்ள செந்தமிழ்த் தேனே! நின் அரும்பெரும் பெருமையை யாரே அறையவல்லார். நின் ஆற்றலுக்குத்தக்க பிரதியுபகாரம் செய்ய எங்களால் இயலாமற்போயினும்,இவ்வூர்ச் சன்மார்க்க சபையாராகிய நாங்கள் நினக்கு எங்களாலியன்ற உதவியைச் செய்யப் பின்னடையோமென்பதை உறுதியாகவும், பணிவாகவும் தெரிவித்துக் கொள்ளுகின்றோம்.

ஆனந்தபோதினி யென்னும் அரும் பெரும் கலைக்கடலே! இச்சன்மார்க்கச் சபையாராகிய நாங்கள் மிக்கச் சந்தோஷத்துடனளித்த இப்பத்திரத்தைப் பெற்றுச் சிறுவர்களுக்கு ஹிதோபதேசம் மேன்மேலும் செய்யுமாறு நாங்கள் பிரார்த்திக்கின்றோம். சச்சிதானந்த பரம்பொருளாகிய கருணாகரக் கடவுள் நினக்குப் பூரண ஆயுளையும், தேகாரோக்கியத்தையும் கொடுத்துக் காப்பாற்றுவாராக. **ஏ. வ. குப்புசாமி முத**லி, சன்மார்க்க சபைத்தலைவர்,

ஏழூர், ராசிபுரம் தாலூகா.

**குறிப்பு** :—இச் சன்மார்க்க சபையார் நமது ஆனந்த போதினியின் அபிவிர்த்தியை முன்னிட்டு எடுத்துக் கொண்டிருக்கும் சிரத்தை நன்கு பாராட்டற்குரியது. பத்திரிகையைப் பெற்று வாசித்து வருவதுடன் அதன் 12-வது ஆண்டின் வரவேற்புக் கொண்டாட்டத்தையும் நடத்தி மகிழ் வெய்தியது நமக்குப் பெருமகிழ்வைத் தருகின்றது. மற்றும் நமது பத்திரிகைக்குப் புது சந்தாதாரர்களைச் சேர்த்துக் கொடுத்தது மன்றி மேலும் சேர்க்க முயற்சி எடுத்துக் கொண்டிருப்பது சபையார் கொண்டுள்ள பத்திரிகாபிமானத்தை இனிது புலப்படுத்துகின்றது.

இச் சபையானது தழைத் தோங்கி உயர் நிலை யடைந்து தனது அங்கத்தினரை மேன் மேலும் உற்சாகப் படுத்தி நீண்ட காலம் சுகவாழ்வி லமர்த்த எல்லாம் வல்ல இறைவன் கிருபை புரிவானாக.

இச் சபையாரைப் போன்று நம் பத்திரிகை விஷயமாய் அபிமானங் கொண்ட மற்று முள்ள தமிழ்ச் சபையாரும் இதனபிவிருத்தியைக் கவனிப்பின் நமது பத்திரிகை மேன் மேலும் விருத்தி யடைதல் கூடும்.

ப-ர்.

---

## வாழ்த்துப்பாக்கள்.

### அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

கண்ணிய வுலகி னுன்காக் கருதிடு யுகங்க டம்மில்
நண்ணுமிக் கலியு கத்து ணவிலுமை யாயி ரத்தோ
டெண்ணுமீ ராறு மத்தோ டீரிரண் டாண்டும் செல்ல
வண்ணமாய் வந்த வாண்டு வழங்கெழி னிகழா நிற்ப.

வந்திடு மிராக்க தாப்த வளமிகு கடக மாதம்
சிந்தைசெய் முதலாந் தேதி சிறந்தநா ளன்று சீரா
னந்தபோ தினியொண் பேரா னலன்கொளிப் பத்தி ரந்தான்
வந்துதோன் றிற்று லிந்த வையக முவகை பூப்ப.

தொல்லிரு ளகற்ற லாலும் தொலைவிலாச் சீர்த்தி மிக்க
பல்வகை மதத்தர் தாமும் பரவிட வருத லாலும்
நல்லவாம் புகழ்க்க திர்க ணவையற வீச லாலும்
எல்லதை யிதற்கொப் பாக வியம்பிட லாகு மன்றே.

இந்நல் வுலகி லார்க்கு மியையறி வின்ப நல்கிப்
புந்தியைப் பெருக்கிப் பல்லோர் புகழ்ந்திடு பெருமைத் தாய்வ
ளர்ந்திடு நிலேயி லீதே ழமையுறு தினிது வாழச்
சிந்தனை செய்வார் சிந்தை திகழ்பரம் பொருளே செய்க.

மந்தமா மதியை யோட்டி மலர்ஞானக் கதிரைக் காட்டி
நந்தமர் நாட்டி லெங்கும் நலமுறு முறவை நாட்ட
வந்திடு மிதனையேந்தி வகைபெறப் படிப்பார் வாழி
தந்திடு தலைவ னோடு தராதலம் வாழி வாழி.

**வயி-முத்துவயிரவ பண்டாரம்**, கதிரேசன் கோவில், வதுளை.

ஸ்ரீமான். ஆரணி-அப்பாதுரை பிள்ளையவர்களியற்றிய

## ஆனந்த போதினி 12-வது வருட வாழ்த்து.

**நேரிசை வெண்பா.**

ஈராறு சேர்ஆண்டில் ஈங்கெவருங் கண்களிக்கப்
பேராறு மாயுள் பெருகிடவே—சீராரும்
ஆனந்த போதினியே அன்புறுமா நின்றந்தை
ஞானமொடு வாழ்க நயந்து.

## நாவல் பகுதி.

### அம்பாலிகை அல்லது அதிசயமரணம்.

(தொகுதி 11, 494-ம் பக்கத் தொடர்ச்சி.)

**அம்:**—சவக்குழியிலிருந்து வெளிக்குக் கொண்டுவந்த பிறகே ஸ்மரணைவந்தது.

**ஆன:**—இருக்கட்டும்; அப்பழத்தைத் தின்றதற்கு முன்பு நடந்த ஒரு சங்கதி யாவது தெரியாதா?

**அம்:**—அதற்கு முன் ஒரு புஷ்பச்செண்டிருந்தது; அதை முகர்ந்துகொண் டிருந்தேன்.

**ஆன:**—அதை யார் கொண்டுவந்து கொடுத்தார்கள்?

**அம்:**—யாரும் கொண்டுவந்து கொடுக்கவில்லை; அது என் மேஜைமேல் வைக்கப்பட்டிருந்தது.

**ஆன:**—சரி சரி; இப்போது உண்மை வெளிப்பட்டு விட்டது. உன்னைச் சவம் போலாக்கிவிட்ட பாஷாணம் அப் புஷ்பச்செண்டில்தான் இருந்தது; அம்மருந்து மலையாளத்தானால் தயார் செய்யப்பட்டுக்கறுப்பண்ணனுக் களிக்கப்பட்டது.

**அம்:**—அப்படியாயின் யாவரும் நான் இறந்துபோனதாகவே நம்பிக்கொண் டிருக்கிறார்கள்?

**ஆன:**—ஆம். உன் சவச்சடங்கு பகிரங்கமாய்க் கம்பீரத்தோடு நடத்தப் பட்டது. அச்சமயம்தான் மனோகரன் உனக்கு முத்தமளித்து விட்டுக் கறுப்பண்ணன் முத்தமிடச் சவப்பெட்டியினருகில் சென்றபோது அவனைத் தடுத்து முதல் முதல் அவன் செவியில் "நீயே யவளைக் கொன்ற பாதகன்" என்று கூறினான்.

**அம்:**—அப்பா! இவைகளைக் கேட்கும்போது என் குலை நடுங்குகிறது.

**ஆன:**—"இப்போது நீ நடுங்கவேண்டிய கவலையே யில்லை. நான் இதுகாறும் கறுப்பண்ணனைப்பற்றிக் கூறியவையாவும் உண்மையே யென்று உன் மனதில் அய்யமறத் தெரிவதற்காக இன்னும் ஒரேயொருசங்கதி கூறுகி-

றேன் கேள். இப்போது அவன் உனக்குப்பின் முழு ஆஸ்தியும் அவனே யனுபவிக்கவேண்டுமென்று உன் தந்தை மரணசாசனம் எழுதி வைத்த தாக வொரு கள்ள மரண சாசனம் எழுதி வைத்துக்கொண்டு அதன் படிக்கு உன் சொத்துக்கள் யாவற்றையும் தானே கைவசப்படுத்திக் கொண்டு அனுபவித்து வருகிறான்'' என்றான்.

அம்பாலிகை இச் சங்கதியைக் கேட்டதே பேரிடிவிழுந்தவள்போல் பிர மித்துத் திகைத்துச் சற்று நேரம் ஒன்றுமே தோன்றாது அசைவற்று நின்றாள். யாவும் கனவில் நடப்பனபோல் அவளுக்குத்தோன்றின.

## 15-வது அத்தியாயம்.

கறுப்பண்ணன் மிக்க தந்திரசாமார்த்தியத்தோடு யாவும் ஜோடித்து வைத்திருந்தான். மனோகரன் கள்ளனென்றும் கொலையாளி யென்றும் யாவர்க்கும் புலப்படும்படி செய்துவிட்டு மேலுக்கு அவனைப்பற்றி அம் பாலிகையிடம் சிபாரிசுசெய்தான். அம்பாலிகை ஆனந்தலிங்கத்தை நோக்கி ''நான் இன்னொரு சங்கதிகூற மறந்து விட்டேன். என் ஆஸ்தியில் பாதியைக் கறுப்பண்ணன் பேருக்கு எழுதி வைத்துவிட்டால் அதை யவன் என் காதலர் பேருக்கு எழுதிக்கொடுத்து விடுவதாய்க் கூறினான். இன்றிரவு அவ்வாறே யெழுதிக்கொடுக்க நினைத்திருக்கிறேன்'' என்றாள். (தொடரும்)

**ஆரணி-குப்புசாமி முதலியார்.**

## வர்த்தமானக் குறிப்பு.

**ஓர் பிரிவு:**—தேசபந்து தாஸரின் அருமைப் புதல்வரான ஸ்ரீமான். சிராஞ்சன தாஸர் திடீரென்று (26-6-26)ந்தேதி யிரவு கல்கத்தா நகரில் இவ் வுலகைத் துறந்தனர். இதன் பொருட்டு நாம் பெரிதும் வருந்துகிறோம். வங்கநாட்டுத்தியாகியும், தேசத்திற்குப் பந்துவுமாக விளங்கிய தாஸருக்கு இவர் ஒரே குமாரராவர். தமது அருமைப் புதல்வனை இழந்த துக்கத்தை வஸந்தா தேவியார் எப்படிச் சகிப்பார்? ஆருயிர்க்காதலரை இழந்து இன்னும் ஓராண்டு முடியவில்லை. அதற்குள் அவர் தமது 22-வயதுள்ள செல்வக் குமா ரரையும் இழந்துவிட்டார். ஸ்ரீமான் சிராஞ்சனர் தேசத்தொண்டில் ஈடுபட் டுச் சிறைக்குச் சென்றவர்களில் ஒருவர். தமது கணவரையும் அருமைக் குமாரரையும் இழந்து துயருறும் வசந்தா தேவியாருக்கும், அவரது குடும்பத் தினருக்கும் எமது அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

* * * * * *

**பங்காவின் தோடக்கம்:**—லார்ட் கார்ன் வாலிஸ் இந்தியாவில் (1786—1793) இராஜப் பிரதிநிதியாயிருந்த போழ்துதான் கல்கத்தாவில் முதன் முதலாகப் பங்கா உபயோகத்திற்கு வந்தது. பழைய கோட்டையில் வேலை செய்துவந்த ஒரு குமாஸ்தாவே முதலில் பங்காவை உபயோகித்தார். மிகவும் உஷ்ணமாயிருந்த ஒரு தினத்தில் அவர் தேகம் முழுவதும் வியர்த்தது. அங்குநின்ற வேலையாளால் தொங்கவிடப்பட்டிருந்த ஒரு பாயினால் உண்டா கிய காற்றால் அவருக்குச் சற்று சிரம பரிகாரம் ஏற்பட்டது. அவர் உடனே அப்பாயைத் தம்மேஜையில் தொங்கவிடச்செய்து அவ்வேலையாளை ஆட்டி விடச் செய்தார். அதனால் வந்த காற்று அவரைத் தூக்கத்திலாழ்த்தியது. திலிருந்து பங்கா கையினால் ஆட்டப்பெற்று வெகு பிரயோசனத்தைத் துகொண் டிருந்தது. இப்போது மின்சார விசிறி கண்டு பிடிக்கப்பட்ட ன் பங்காவுக்கு வேலையில்லை. (ந-ச.)

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

**அக்ஷயஹு ஆவணிமீ—கலியுகாதி 5028. சாலிவாகனம் 1849,**
**பசலி 1336—கொல்லமாண்டு 1102—ஹிஜரி 1345,**
**இங்கிலீஷ் 1926ஹு ஆகஸ்ட்டுமீ—செப்டம்பர்மீ**

| ஆவணிமீ | ஆகஸ்ட்டு | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 17 | செவ் | அ10-30 | அனு55-50 | சி55-50ம | பிரயாணம் விலக்க |
| 2 | 18 | புத | நவ9-43 | கேட்55-20 | சி55-20ம | கரிநாள், ஆயுதம்பயிற்ற |
| 3 | 19 | வியா | தச6-58 | மூல53-5 | சித்60 | ததிவிரதாரம்பம், விவாகம் |
| 4 | 20 | வெ | ஏகா2-20 துவா56-5 | பூரா48-53 | பி48-53சி | அவமாகம், சர்வமத்வ ஏகாதசி, வரலக்ஷ்மி விரதம் |
| 5 | 21 | சனி | திர48-28 | உத்43-23 | சித்60 | யாத்திரை செய்ய |
| 6 | 22 | ஞா | சது39-40 | திரு36-43 | அ36-43ம | **ருக்வேத உபாகர்மம்** |
| 7 | 23 | திங் | ○30-18 | அவி29-15 | சித்60 | **பௌர்ணமி, யஜுர் வேத உபாகர்மம் ஆவணி அவிட்டம்** |
| 8 | 24 | செவ் | பிர20-30 | சத21-28 | மர60 | காயத்திரிஜெபம் [தம் |
| 9 | 25 | புத | துதி11-8 | பூரட்14-13 | அ14-13சி | கரிநாள், அருன்யசயனவிர |
| 10 | 26 | வியா | திரி2-20 சது54-38 | உத்7-28 | சித்60 | அவமாகம், சங்கரசதுர்த்தி |
| 11 | 27 | வெ | பஞ்48-18 | ரேவ1-50 அசு57-43 | அமி60 | அவமாகம், பும்சவனம், சீம [ந்தம், சர்வமுகூர்த்தம் |
| 12 | 28 | சனி | சஷ்43-45 | பர55-25 | சித்60 | கதிரறுக்க, மாடுவாங்க |
| 13 | 29 | ஞா | சப்41-5 | ※55-5 | சித்60 | **கிருத்திகை** |
| 14 | 30 | திங் | அ40-30 | ரோ56-40 | அமி60 | **ஸ்ரீ கிருஷ்ணஜயந்தி** |
| 15 | 31 | செவ் | நவ41-53 | மிரு60 | சித்60 | |
| 16 | 1 (1926ஹு செப்டம்பர்மீ) | புத | தச44-50 | மிரு0-10 | சித்60 | |
| 17 | 2 | வியா | ஏ49-13 | திரு5-13 | ம5-13அ | |
| 18 | 3 | வெ | து54-33 | புன11-20 | சி11-20ம | |
| 19 | 4 | சனி | திர60 | பூச18-23 | சி18-23ம | |
| 20 | 5 | ஞா | திர0-35 | ஆயி25-50 | சி25-50ம | |
| 21 | 6 | திங் | ச●6-48 | மக33-28 | ம33-28சி | |
| 22 | 7 | செ | அ13-5 | பூர41-3 | சித்41-3அ | |
| 23 | 8 | புத | பிர19-10 | உத்48-20 | அ48-20ம | |
| 24 | 9 | வியா | துதி24-48 | அஸ்55-3 | சித்60 | |
| 25 | 10 | வெ | திரி29-53 | சித்60 | சித்60 | சோடசோம விரதம் |
| 26 | 11 | சனி | சது34-10 | சித்1-10 | மர1-10அ | **விநாயக சதுர்த்தி** |
| 27 | 12 | ஞா | பஞ்37-25 | சுவா6-28 | சித்6-28ம | ரிஷி பஞ்சமி |
| 28 | 13 | திங் | சஷ்39-28 | விசா10-43 | ம10-43சி | கரிநாள், சஷ்டி, சூரிய |
| 29 | 14 | செவ் | சப்39-58 | அனு13-33 | சி13-33ம | ஜெய சப்தமி [சஷ்டி |
| 30 | 15 | புத | அ38-55 | கேட்14-48 | சி14-48ம | ஜேஷ்டா கௌரிவிரதம் |
| 31 | 16 | வியா | நவ36-3 | மூல14-25 | சித்60 | கன்னி ரவி 18-53 |

| | செ | | ராகு |
|---|---|---|---|
| | 16வ சிம்-புத | | புத சுக் |
| குரு | 20 ,, சிம்-சுக் | | சூரி |
| கே | | சனி | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" POWER PRESS,
15, VENKATESA MAISTRY ST., MADRAS.